# மனம் பிரார்த்தனை மந்திரம்



வானதி பதிப்பகம்

டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி

# மனம் பிரார்த்தனை மந்திரம்

(பல புதிய கட்டுரைகள் இணைக்கப்பெற்ற நூல்)

டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி



வானதி பதிப்பகம்
13, தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு: | ஜூன், | 1979 |
| இரண்டாம் பதிப்பு: | அக்டோபர், | 1979 |
| மூன்றாம் பதிப்பு: | ஆகஸ்டு, | 1981 |
| நான்காம் பதிப்பு: | நவம்பர், | 1982 |
| ஐந்தாம் பதிப்பு: | டிசம்பர், | 1983 |
| ஆறாம் பதிப்பு: | அக்டோபர், | 1984 |
| ஏழாம் பதிப்பு: | நவம்பர், | 1985 |
| எட்டாம் பதிப்பு: | டிசம்பர், | 1986 |
| ஒன்பதாம் பதிப்பு: | டிசம்பர், | 1987 |
| திருத்திய பத்தாம் பதிப்பு: | நவம்பர், | 1988 |

**திருநாவுக்கரசு தயாரிப்பு**

---

**விலை ரூ. 12-00**

அச்சிட்டோர்:

**மூவேந்தர் அச்சகம்**
**இராயப்பேட்டை**
**சென்னை-600 014.**

# முன்னுரை

இக்கட்டுரைகளை மூன்றாண்டுகளுக்கு முன் எழுதினேன். அவற்றை மீண்டும் படித்துப் பார்க்கிறேன். அவை நம் சிந்தனையைப் படிப்படியாக, ஆழமான நிலைக்கு எடுத்துச் செல்கின்றன. ஒரு மன அமைதியைத் தருகின்றன. பரம்பொருளுடன் ஒரு கணம் நம்மை லயிக்கச் செய்கின்றன.

வாழ்வின் அடித்தளத்தில் காணும் மாறா உண்மைகளை—நிரந்தர உண்மைகளை— பேருண்மைகளை நமக்குப் புலப்படுத்துகின்றன.

நம் வாழ்க்கை நம்முடன் முடிந்துவிடுவதில்லை. நம்மைச் சுற்றி நம் குடும்பம் இருக்கிறது; பெற்றோர், உற்றார், உறவினர், நண்பர்கள் இருக்கிறார்கள்; உலகம் இருக்கிறது; நாம் வாழும் பூமி இருக்கிறது; நம்மைத் தாண்டி சூரியன், சந்திரன் என பல நட்சத்திரங்கள், கோள்கள் உலவுகின்றன. நாம் யார், எங்கே இருக்கிறோம், ஏன் இருக்கிறோம் என்ற ஒரு பரந்த கண்ணோட்டத்தை இவை நமக்குத் தருகின்றன. நாம் நம் கதியில், நல்ல முறையில் இயங்க இந்தப் பரந்த கண்ணோட்டம் தேவை.

இக்கட்டுரைகளை வேகமாகப் படித்துவிட முடியாது. வேகமாகப் படிப்பது அதிகம் பயன் தராது. மெதுவாகப் படித்து அதுபற்றி ஆர அமர ஆலோசிக்குமாறு வாசகர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

இதே கட்டுரைகளை என் இள வயதில் நான் எழுதியிருப்பேனா என்பது சந்தேகமே. அதேபோல இவற்றை என் இளவயதில் படித்திருப்பேனா, புரிந்து கொண்டிருப்பேனா என்பதும் சந்தேகமே. ஆகவே இதைப்பற்றி—ஆத்மீக விஷயங்களைப் பற்றி அறிந்துகொள்ள — புரிந்துகொள்ள ஒரு மனப்பக்குவம் தேவை. ஒரு வயது தேவை. வாழ்வின் சில படிகளைக் கடந்த அனுபவங்கள் தேவை. ஆகவே சில விஷயங்கள் புரியாமலிருந்தாலோ, நம்ப முடியாது போலிருந்தாலோ, கவலைப்படாதீர்கள். மேலே செல்லுங்கள்.

இது எனது மனோதத்துவக் கட்டுரைகளின் தொடர்தான். மனத்தைப்பற்றி அறிய அறிய அது ஆத்மீகத்திலும், நமது மதக் கோட்பாடுகளைப் பற்றிய சிந்தனையிலும் முடிகிறது. இந்த நமது தத்துவங்களையே கிழக்கத்திய மனோதத்துவம் என்று மேனாட்டு அறிஞர்கள் இப்போது பாகுபாடு செய்து பேசுகிறார்கள். மேற்கத்திய மனோ தத்துவம் பெரும்பாலும் மனிதனது செயல்கள், நடையுடை பாவனைகளின் விளக்கமாக அமைந்திருக்கிறது.

இக்கட்டுரைத் தொகுதியில் இரண்டு பகுதிகள் இருக்கின்றன. முதல் பகுதி மனம் பற்றிய கட்டுரைகள். இரண்டாவது பகுதி பிரார்த்தனை பற்றிய கட்டுரைகள். மனம் பற்றிய கட்டுரைகளை ஓர் தத்துவ விளக்கமாக—நான் அறிந்த அளவில் எழுதியிருக்கிறேன். தற்கால விஞ்ஞானக் கண்டு பிடிப்புகளும் மனோதத்துவ ஆராய்ச்சிகளும், நமது இந்துமத பாரம்பரியமும் ஒன்று கலந்து வரும் விளக்கம் அது.

பிரார்த்தனை பற்றிய கட்டுரைகளைத் தத்துவ விளக்கத்துடன் நடைமுறைப் பயிற்சி அளிப்பனவாய் எழுதியிருக்கிறேன். ஆகவே இதைப் படிப்பவர்கள் பயிற்சி செய்தால்—தியானம் செய்தால் — பிரார்த்தனை செய்தால் — பலன் கிடைக்கும் என்பது நிச்சயம். அந்த அளவில் இது ஒரு பலன் தரும் புத்தகம் என்று அடக்கத்துடன் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

இத்துடன் நான் கிறிஸ்துமஸ் சமயத்தில் எழுதிய ஏசுபிரான் பற்றிய கட்டுரையும், கடைசிக் கட்டுரையாக இணைக்கப்பட்டிருக்கிறது. அது பொருத்தமென்றே இணைத்துள்ளேன்.

இக்கட்டுரைகள் தொடர்ந்து ஆனந்த விகடனில் 1976-ல் வெளி வந்தன. இக்கட்டுரை களை மிகவும் ரசித்துப் பிரசுரித்த விகடன் ஆசிரியர் திரு. பாலன் அவர்களுக்கும் சதா என்னை ஊக்கமுட்டி எழுதச் செய்த என் நண்பர்

ஆசிரியர் மணியன் அவர்களுக்கும் நான் நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

எனது அலுவல்களிடையே ''தனியாக இப்படி ஒரு புத்தகம் எழுதுங்கள்'' என்று யாராவது சொல்லியிருந்தால் எழுதி முடித்திருப்பேனா என்பது சந்தேகமே!

நீங்களும், தமிழ் கூறு நல்லுலகிலுள்ள எல்லா மக்களும் எல்லா நலன்களையும் பெற இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

விளநகர்
ஆறுபாதி போஸ்ட்
தஞ்சை மாவட்டம் 609 305

அன்பன்
**எம். எஸ். உதயமூர்த்தி**

## மனம், பிரார்த்தனை, மந்திரம்

# முன்னுரை

வாசகப் பெருமக்களே! வணக்கம்.

மனமும், பிரார்த்தனையும் என்ற எனது புத்தகத்தில் மந்திரங்கள் என்ற ஒரு முக்கிய பகுதியை சேர்த்திருக்கிறேன். ஆகவேதான் மனம், பிரார்த்தனை, மந்திரம் என்ற புதிய தலைப்பு.

மனம் எப்படி செயல்படுகிறது என்பதை உணர்ந்து கொள்ள இந்த நூல் உதவும். பிரார்த்தனை எப்படி செயல்படுகிறது என்பதைப் புரிந்துகொள்ள இது பயன் படும்.

மிகுந்த பண நெருக்கடியிலும், குடும்ப சந்தேகத்திலும், வாழ்ந்த ஒரு பெண் கூறினாள்; ''மனமும் பிரார்த்தனையும் இல்லையென்றால் நான் என்ன செய்து கொண்டிருப்பேனோ? ஒவ்வொரு முறையும் கஷ்டம், பயம் வரும் போதெல்லாம் அதைத்தான் எடுத்துப் படிப்பேன்!'' அந்த வாசகங்கள் இன்னும் என் நினைவில் நீங்காமல் நிலைத்திருக்கின்றன.

பிரார்த்தனை, ஆண்டவன், பிரபஞ்ச சக்தி, ஆத்மீக அனுபவங்கள், தியான முறை—இவை பற்றி தெரிந்து கொள்வது நமக்குப் பெரும் தெம்பைக் கொடுக்கிறது.

இந்தப் புத்தகத்தில் ஒரு நான்கு கட்டுரைகளைப் புதிதாக இணைத்துள்ளேன். என் வாழ்வில் ஏற்பட்ட அதீத சம்பவங்களை ஒரு கட்டுரையில் குறிப்பிட்டுள்ளேன். ஏதோ பிரபஞ்சத்தின் பெரும் சக்தி எனக்கு அருகிலே இருப்பதுபோன்ற உணர்வு எனக்கு பல சமயம் ஏற்பட்டது. உங்கள் வாழ்விலும் இத்தகைய அனுபவங்கள் ஏற்பட்டிருக்கும். தயவு செய்து எழுதுங்கள் எனக்கு.

மந்திரம் என்பது என்ன என்பதைப் பற்றி விரிவாக சிந்தித்து ஆராய்ந்து என் அனுபவ அறிவுடன் மந்திரங்கள் என்ற கட்டுரையை எழுதி இருக்கிறேன்.

நாதம், பொருள், திரும்பத் திரும்பச் சொல்லும்போது ஏற்படும் வலிமை, நமது ஆழ்நம்பிக்கை, என்பன பற்றி நீங்கள் இக்கட்டுரையில் தெரிந்து கொள்ளக்கூடும். எனக்குப் பிடித்த கட்டுரை இது. அடக்கத்தை விட்டுக் கூற வேண்டுமானால், இது ஒரு அதிசயமான கட்டுரை. அதிசயங்களை விளைவிக்கக் கூடிய கட்டுரை! பயன் பெறவும். மிகையாகக் கூறியிருந்தேனானால் மன்னிக்கவும்.

இத்தாலியில் அசிசி என்ற ஊரில் செயிண்ட் பிரான்சிஸ் என்ற கிறிஸ்துவ ஞானி வாழ்ந்தார். பணக்கார வாழ்வை உதறிவிட்டு, சாதாரண துறவியாக வாழ்ந்து ஏழைகளுக்கு உதவிய மகான் அவர். அவருடைய பிரார்த்தனை வாசகம் உள்ளத்தைத் தொடுவது. நீங்களே படித்துப் பாருங்கள்!

ஆதித்ய இதயம் என்னுள் ஒரு இனம் புரியாத கவர்ச்சியை வியப்பை ஏற்படுத்தியது. ஏனெனில் இது ஒரு மகா மந்திரம் என்று போற்றப்படுகிறது. இதில்

உண்மை இருக்கிறதா என்று நான் படித்துப் பார்த்தபோது நான் என் ஆரம்ப அறியாமையை உணர்ந்தேன்.

ராம ராவண யுத்தத்தைப் பார்க்க அகத்திய முனிவர் வருகிறார். ''நியாயம் ராமன் பக்கமிருக்கிறது; அவன் வெல்ல வேண்டும்!'' என்ற எண்ணத்துடன் ராமனுக்கு வெற்றிக்கான மந்திரங்களை உபதேசிக்கிறார் அகத்தியர். என்ன மந்திரம் அது?

''எல்லோருக்கும் சக்தி தருபவன் சூரியன். அவனை வணங்கு. வெற்றி பெறுவாய்!'' என்கிற மந்திரம்தான் அது. பேராசிரியர் வே. ராகவனும் அவரது மகள் பிரியம்வதாவும் தமிழ்ப்படுத்திய ஆதித்ய இதயத்தை எனது தமிழ்நடையில் எழுதி இருக்கிறேன். அவர்களுக்கு என் நன்றி. ஆதித்தன் என்றால் சூரியன். அவனது இதயம்—அதுதான் பிரபஞ்ச ஜோதி. அதை மனத்தில் உருவகித்து மந்திர வாசகங்களைச் சொல்லும்போது உங்களுக்குள் மாற்றம் ஏற்படுவதை உணர்வீர்கள்.

ஆத்மீகப்படியில் நாளும் ஒருபடி மேலே செல்ல முயலுங்கள். வாழ்க்கை ஒரு வாய்ப்பு. இந்த மந்திரங்களையும் இம்மந்திரங்கள் எப்படி செயல்படுகின்றன என்பதையும் இவற்றின் மூலம் நாமும், இவ்வுலகமும் இப்பிரபஞ்சமும் எப்படி இணைக்கப்பட்டிருக்கிறோம் என்பதையும் தெரிந்து கொள்ளுவதற்காகவே—எல்லாவற்றின்பாலும் அன்பு செலுத்துவதற்காகவே—இந்த வாழ்வு நமக்கு அளிக்கப்பட்டிருக்கிறது.

பிரார்த்தனைக்குச் செயல்வடிவம் உண்டா? உண்டு! அதுதான் தொண்டு. அன்னை தெரசாவின் தொண்டு. திருப்பராய்த்துறை சித்பவானந்தா செய்துவரும்தொண்டு! இன்னும் எண்ணற்றோர்! பல்வேறு விதங்களில்!

எனது நண்பர் டைரக்டர் பாலசந்தர் இதை எடுத்துக் காட்டுகிறார் ''உன்னால் முடியும் தம்பி!'' என்கிற படத்தில். ''வாயில் என்ன மந்திரத்தை முணு முணுத்தாலும் போதாது. வாழ்க்கையில் தொண்டாக அது பரிணமிக்க வேண்டும்'' என்ற மகத்தான உண்மையை அக்கதையின் அடி நீரோட்டமாக அமைத்திருக்கிறார். அவருடையதும் ஒரு தொண்டுதான்.

ஒத்த உள்ளம் உடையோரை எல்லாம் ஒன்று திரட்டுங்கள்.

நலிந்தோருக்கு—நாட்டுக்கு நல்லது செய்யுங்கள்!

ஒரு புதிய உயர் சமுதாயத்தை உருவாக்குவோம், வாருங்கள்!

விளநகர், ஆறுபாதி போஸ்ட்
மயிலாடுதுறை தாலுகா
தஞ்சை மாவட்டம்-609305

எம். எஸ். உதயமூர்த்தி
2-10-88

# காணிக்கை

**எனக்கு அறிவு புகட்டிய ஆசிரியர்களுக்கு :**

★ பாரதியைப் போல் தோற்றமும் கம்பீரமும், அறிவும், தெளிவும் கொண்ட என் ஆரம்பப் பள்ளி ஆசிரியர் ரமணி அய்யர் அவர்களுக்கு.

★ பாரபட்சமில்லாமல் நோக்கும் விஞ்ஞான மனோபாவத்தையும், தெளிவையும் தைரியத்தையும் ரசாயனப் பாடத்துடனே சேர்த்துப் போதித்த டாக்டர் பாலையா அவர்களுக்கு.

★ உலக ஞானத்தை கல்கி என்ற பத்திரிகை மூலம் எனக்குப் போதித்த பேனா மன்னர் பேராசிரியர் கல்கி அவர்களுக்கு.

**அவர்களை நெஞ்சில் நிறுத்தி வணங்குகிறேன்.**

**எம். எஸ். உதயமூர்த்தி**

# பொருளடக்கம்

## முதல் பகுதி

## மனம்

## இரண்டாம் பகுதி

## பிரார்த்தனை



## மூன்றாம் பகுதி

## மந்திரம்



# 1. பிரபஞ்ச அறிவு

**வா**ழ்க்கையின் தாத்பரியமே 'நல்லெண்ணங்கள்' என்ற ஒரு சொற்றொடரில் அடங்கியிருப்பதாக எண்ணுபவன் நான். நல்லெண்ணங்களுக்கு மேலாக, வாழ்க்கையை மேம்படுத்தும் எந்த உயரிய சக்தியும் இருப்பதாக எனக்குப் படவில்லை. என் எண்ணங்களில் நான் தேய்ந்து மிதந்து கொண்டிருந்தபோது எனது வாசகர் ஒருவரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. எத்தனையோ கடிதங்கள் வருகின்றன என்றாலும் அக்கடிதம் என்னவோ மனத்தைக் கவ்விப் பிடித்து விட்டது. அனுதாபத்தைத் தாண்டி, துயரத்தை என்னுள் எழுப்பியது அது.

வாசகரின் வாழ்க்கையில் ஏற்பட்ட உள்ள அதிர்ச்சி, உடல் அதிர்ச்சியாக மாறி, வாசகரின் செயல் திறனை, சிந்திக்கும் திறனைப் பெரிதும் பாதித்து விட்டது. என் எணண்ங்கள் அதைப் பற்றியே சுற்றிக் கொண்டிருந்தன. நான் என்ன யோசனை கூறக்கூடும்? விளக்கம், சமாதானம் கூறக்கூடும்?

சிந்தனைகளை மனம் சுமக்க நிலத்தில் நடந்தேன். இது என்ன சோதனை? என்று அல்லலுற்றது. வாசகரின் துயரங்களைப் பகிர்ந்துகொண்டு எங்கோ மனம் முறையிட்டுக் கொண்டிருந்தது.

"குணமாகும் என நம்புங்கள். நல்லெண்ணங்களை உள்ளே விடுங்கள். பழைய சம்பவங்களை மறக்க முயலுங்கள். புதிய விஷயங்களில் ஈடுபடுங்கள்" என்று வழக்கமாகப் பதில் எழுதியிருப்பேன். அப்படியெல்லாம் எழுதியிருந்தால் ஏதோ பள்ளி மாணவன், பாடத்தை ஒப்புவிப்பது போலத்தான் அமைந்திருக்கும். ஆனால் பிரச்னை ஜீவ நாடியைத் தொட்டுக் கொண்டு எங்கோ ஆழத்தில் இருந்தது. "கோயிலுக்குச் செல்லுங்கள். தியானம் செய்யுங்கள்; பிரார்த்தனை செய்யுங்கள். ஞானிகளை-யோகிகளைத் தரிசியுங்கள்" என்று எழுதினேன்.

மனித அறிவிலும் சாதனையிலும் மிக்க நம்பிக்கை வளர்க்கும் விஞ்ஞானப் பயிற்சி பெற்றவன் நான். அப்படிப்பட்ட நான் 'நம் காலிலேயே நாம் நிற்க வேண்டும்,' 'நமது விதி நமது கையிலே' என்ற சித்தாந்தங்களுக்கு மாறாக 'தியானம் செய்யுங்கள். ஞானிகளைத் தரிசியுங்கள்' என்று கூறவாவது? இது விஞ்ஞானப் பயிற்சிக்கு ஏற்றதாய் இல்லை என்று தர்க்கவாத அறிவு என்னை இடித்துக் கொண்டிருந்தது. யோசித்துப் பார்த்தேன். நம்மை மீறிய ஒரு மகத்தான அறிவு இருக்கிறது என்பதை உணர்கிறேன். ஆனால் அதை ஒத்துக் கொள்வது—பிறர் முன்னிலையில் ஏற்றுக் கொள்வது எனது அறிவின் பெருமைக்கு இழுக்காகும் என்ற ஆணவப் போராட்டம் என்னுள் உருவாகிக் கொண்டிருப்பதை உணர்ந்தேன். அப்படி ஏற்றுக் கொண்டால் 'படித்தவர்'கள் இதைப் பரிகசிப்

பார்களோ என்ற பயம். எல்லாவகை வாதங்களிலுமே 'நான்' என்ற நினைப்பு போலி கௌரவமாகவும், ஆணவமாகவும் என்னை முன்னுக்குத் தள்ளிக் கொண்டிருந்ததை உணர்ந்தேன். இந்த உலகின் மூலாதார சக்தியைவிட நான் பெரியவன் என்று எண்ண விரும்பும் 'நான் யார்' என்ற எண்ணம் என்னுள் எழுந்தது. நமக்கு முன்பு எத்தனையோ பேர் இக் கேள்வியைக் கேட்டிருக்கிறார்கள். "நான் யார்?" என்ற கேள்வியுடன் தனது பதினேழாவது வயதில் வீட்டைவிட்டு விடை காணக் கிளம்பிய ரமணர் பல புத்தகங்கள் வாயிலாக கேள்விக்கான பதிலைக் கூறி யிருக்கிறார். ஆகவே நமது பிரச்னை எளிதாயிற்று. எங்கள் வீட்டில் மாட்டியிருக்கும் படத்தில் உள்ள ரமணர் மாறாத புன்முறுவலுடன் என்னை நோக்கினார்.

தனிமனித வாழ்வில் போராட்டங்கள்—பிரச்னை கள்—தாங்க முடியாத இடுக்கண்கள் என்று வரும் போது நாம் எப்படி அவற்றைச் சமாளிக்கிறோம்? எண்ணங்களை மாற்றி அமைப்பதன் மூலம், நாம் நமது எதிர்காலத்தை மாற்றி அமைக்கலாம். உண்மை எண்ணங்கள் என்பது வீட்டுக்கு ஓடு போடுவது போல. வீட்டுக்குப் புதிய ஓடுகள் போடலாம். மழை ஒழுகாது. ஆனால் ஓடுகளைத் தாங்க வேண்டிய சரங்கள்—மரச் சட்டங்கள்—மூங்கில் பிளாச்சுகள்—சரியாக இருந்தால் தான் ஓடு நிற்கும். இல்லாவிட்டால் ஓடு விழுந்து விடும். கூரை விழுந்துவிடும். ஓட்டைத் தாங்க சரங்கள் இருப்பது போல, எண்ணங்களைத் தாங்க நம்பிக்கை இருக்க வேண்டும். நம்பிக்கை இல்லாவிட்டால் வாழ்வு என்ற கூரை விழுந்துவிடும்.

துயரங்களும் துன்பங்களும் மேவும்போது மனிதன் செல்லக் கூடிய நம்பிக்கை தரும் ஒரே இடம்—புகலிடம் -கடவுள் தான். கடவுள் என்றவுடன் பலர் கோயிலிலுள்ள தெய்வச் சிலைகளை எண்ணிக் கொள்கின்றனர். இதை விட அறியாமை வேறில்லை. கடவுள் என்னும் மூலாதாரச் சக்தி, அடிப்படைச் சக்தி, எல்லாவற்றையும் இயக்கும் ஒரு மகத்தான சக்தி எங்கும் வியாபித்திருக் கிறது. நமது புலன்கள் செயல்படாதபோது, சிந்தனை களை ஒருமுகப்படுத்தும்போது, நாம் அந்த மூலாதாரச் சக்தியுடன் தொடர்பு கொள்கிறோம். அந்த மூலாதாரச் சக்தியையே பிரபஞ்ச அறிவு என்று கூறுகிறார்கள். மனம் அப்படி ஒருமைப்படும்போது நமக்கும் அந்தப் பிரபஞ்ச அறிவுக்கும்-ஒரு பாதை—தொடர்பு—உண்டா கிறது.

நமது குறைகளை, பிரச்னைகளை, அந்தப் பாதை வழியே உருட்டிக் கொண்டு போய்ப் பிரபஞ்சத்தில், மூலாதராச் சக்தியில் கலந்துவிடுகிறோம். அதேபோல் அம் மூலாதாரச் சக்தியிடமிருந்து அப்பாதை வழியே வரும் அறிவு—சக்தி—நமது—துயரங்களையும் துன்பங் களையும் கரைத்து விடுகிறது. அவற்றை மாற்ற, அழிக்க வழி காட்டுகிறது.

தர்க்க ரீதியாக எதையும் சிந்தித்துச் சீர்தூக்கிப் பார்க்கும் நிலையில் இருக்கும்போது நமது பகுத்தறி வின் மூலம் எண்ணங்களை—நல்லெண்ணங்களை— உள்ளே விடலாம். துயரமும் துன்பமும் மேவும்போது பகுத்தறிவு வேலை செய்வதில்லை. காரண காரியம் காட்டும் அறிவு நமது தேவையைப் பூர்த்தி செய்வ தில்லை. அந்நிலையில் ஆத்மா பற்றிக் கொள்ளும் இடம் நம்பிக்கை என்ற உயிர் நாடியாகும். அந்த

நம்பிக்கை எனும் உயிர் நாடி நாம் ஒவ்வொருவருள்ளும் இருக்கிறது.

'மனம் என்பது என்ன? நான் என்பது யார்? ஏன் இந்தத் துன்பங்கள், சோதனைகள்?' என்று சிந்திக்கத் துவங்கும்போது நாம் ஆழ ஆழ, உள்ளே உள்ளே போகிறோம். ஏதோ ஒரு புள்ளியில் எல்லாம் முடிவடைகிறது. ஞானிகள் அதையே ஒளிப்பிழம்பு என்கிறார்கள். அந்த ஒளிப்பிழம்பில் நாம் இந்தப் பிரபஞ்சத்துடன் ஐக்கியமாகி விடுகிறோம்.

அப்போது நான் யார் என்கிற கேள்வி எழுவதில்லை. அப்போது நமது உடல் பற்றிய உணர்வு மறைந்து விடுகிறது. நாம் நம்மைச் சூழ்ந்திருக்கும் பிரபஞ்ச அறிவுடன் ஒன்றி விடுகிறோம்.

நாம் கோயிலில் பிரார்த்தனை செய்யும்போது, சில பெரியவர்கள் ஞானிகள் முன்னிலையில் இருக்கும் போது, தாங்க முடியாத சோதனைகளால் ஏற்படும் அனுபவம் நம்மை ஆட்கொள்ளும்போது நமக்கு இத்தகைய அனுபவம்—ஐக்கியம் ஏற்படுகிறது. ஒரு பாரம் குறைந்த உணர்வு ஏற்படுகிறது.

மேனாட்டு மனோதத்துவ நிபுணர்கள் வாழ்க்கையில் ஏற்படும் தீமை பயக்கும் மனநிலைகளை ஆராய்ந்திருக்கின்றனர். பயம், கவலை, வெறுப்பு, காமம், பகைமை, பொறாமை என்று மனிதனை அச்சுறுத்தும் அவற்றை வகைப்படுத்தியிருக்கின்றனர். நமது மன வீட்டில் இருந்து இந்தக் குப்பைகளை அகற்றிவிட்டால் வாழ்க்கை நன்கு அமையும் என்பது அவர்களது எண்ணம். உண்மைதான்.

ஆனால் யோசித்துப் பார்க்குமிடத்து இவை அனைத்தும் புறப்படும் இடம் மனம் என்பதும், அந்த மனம் ஒருமைப்படும் இடமே மூலாதாரச் சக்தி என்பதும் புலனாகிறது. ஆக, மூலாதாரத்தைச் சரிப்படுத்தும்போது, நேர்படுத்தும்போது—அத்துடன் ஐக்கியமாகும்போது—எல்லாமே சரியாகிவிடுகிறது என்பதை உணர்ந்தேன். அதையே அனுபவமும் கூறுகிறது. ஆகவேதான், மூலாதாரத்திலிருந்து புறப்படுவோம் என்று பிரபஞ்ச அறிவைத் துணைக்கு அழைத்தேன்.

# 2. நம்மைச் சூழ்ந்திருக்கும் பிரபஞ்ச அறிவு



---

லூயிஸ் அகசிஸ் என்ற தொல்பொருள் ஆராய்ச்சியாளர், கல்லில் பதிந்துபோயிருந்த ஒரு மீன் வடிவத்தைப் பற்றி ஆராய்ந்து கொண்டிருந்தார். அந்த மீனின் வடிவம், கல்லில் முழுமையாக இல்லை. மீனின் பல்வேறு பகுதிகளில், சில கிடைத்தன. அதிலிருந்து மீனின் முழுவடிவத்தையும் கண்டுகொள்ள இயலவில்லை. அந்த மீனோ தற்காலத்தில் உயிர் வாழும் வகையைச் சேர்ந்ததல்ல. அதன் முழு வடிவம் எப்படி இருக்கும் என்று அகசிஸ் நெடுநேரம் சிந்தித்தார், குழம்பினார்; பலனில்லை.

இதை அடியோடு மறந்துவிட முயன்றார். அன்று தூங்கியபோது கனவில் அந்த மீனின் முழு உருவத்தையும் கண்டார். காணாமல் போயிருந்த பகுதிகள் எல்லாம் தெளிவாகத் தெரிந்தன. காலையில் எழுந்து தனது சோதனைக் கூடத்திற்குப் போனபோது கனவு மறந்து, எல்லாம் ஒரே குழப்பமாகி விட்டது. கல்லின் பகுதிகளை எப்படி அமைப்பது என்பது அவருக்குப்

புரியவில்லை. மறுநாள் கனவிலும் அந்த மீனின் வடிவத்தைப் பார்த்தார். மூன்றாவது நாள் புத்தி சாலித்தனமாகப் படுக்கையில் பென்சிலும் தாளும் வைத்துக்கொண்டு தூங்கினார் விஞ்ஞானி. மூன்றாவது நாள் கனவில் வந்த தோற்றத்தை அப்படியே அங்கேயே அரைகுறையாக விழித்துக் கொண்டு படமாக வரைந்து கொண்டார். மறுநாள் காலை தான் தோண்டி எடுக்கும் இடம் சென்று சரியான இடத்தில் வெட்டி மீனின் முழு கல் உருவத்தையும் லூயிஸ் அகசிஸ் கொண்டு வந்தார்.

மீனின் வடிவம் அவர் கனவில் கண்டதுபோல அதே அச்சில் இருந்தது.

இதை அறிந்த மற்ற எல்லோர் மனத்திலும் எழுகின்ற கேள்வி: 'இந்த மீன் தற்போது பழக்கத்தி லில்லாத ஒருவகை மீன். பேராசிரியர் அகசிஸ் இது வரை இதைப் பார்த்ததில்லை. ஆகவே, இந்த நினைவு அவரது அனுபவத்திலிருந்து வந்தது என்று கூற முடியாது. பின் எங்கிருந்து இந்தப் படம்—அறிவு—கனவில் தோன்றியது?'

நிகழும், நிகழ்ந்த, நிகழப்போகும் அனைத்தும் இப்பிரபஞ்சத்தில் திறந்த புத்தகமாக, கல்லில் பதித்த வாசகங்களாகப் பொறிக்கப் பட்டிருக்கின்றனவா? மனித அனுபவத்திற்கப்பால் இப்பிரபஞ்சத்தில் அறிவுப் பேரேடு ஒன்று இருக்கிறதா? ஆக்கத்திறன் படைத்த பல விஞ்ஞானிகளின் வாழ்க்கை வரலாறுகளும் அப்படி ஒரு பிரபஞ்ச அறிவு இருப்பதையும், அங்கிருந்தே தாங்கள் அறிய விரும்பும் விஷயங்களைப் பற்றிய உண்மைகளை அவர்கள் பெறுவதையும் கூறுகின்றன.

சுமார் ஐந்து ஆறடி உயரமும், சுமார் 160 பவுண்டு எடையுமுள்ள மனித உருவிற்குள எல்லாம் வல்ல மூலாதார சக்தியிடமிருந்து தேவையானதைப் பெறும் வழிமுறை அமைந்திருக்கிறது. என்ன அதிசயம்!

இதைப் போலவே, அமெரிக்காவில் எட்கார் கேசி என்ற போட்டோகிராபர் வாழ்விலும் பல நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன. எட்கார் கேசிக்குக் கொஞ்சம் திக்குவாய் இருந்தது. அவரது பல் டாக்டர் அவரை 'ஹிப்னா டைஸ்' செய்து மயக்க நிலைக்கு எடுத்துச் சென்று, "உனது தொண்டை குணமாகும். உனது குரல் சரியாகும்" என்று யோசனைகளைக் கூறினார். உடனே 'குப்'பென்று தொண்டைப் பகுதிக்கு ரத்த ஓட்டம் ஏற்பட்டு அப்பகுதி சிவந்தது. எட்கார் கேசி மயக்கம் தெளிந்தவுடன் அவரது குரல் நல்லவிதமாக அமைந்தது. ஆனால் சில நாளில் அவரது குரல் மீண்டும் கெட்டுப் போயிற்று. மீண்டும் அவர் 'ஹிப்னா டைஸ்' செய்யப்பட்டபோது, மயக்க நிலையிலிருந்து எட்கார் கேசியே பேசினார்.

'எட்கார் கேசியின் உடல் இங்கிருக்கிறது. அங்கே தொண்டையில் இத்தகைய கோளாறு இருக்கிறது. இந்த மாதிரி மனத்திற்கு உத்தரவிட்டால் அவரது தொண்டை குணமாகும்' என்ற யோசனை பல் டாக்டருக்கு எட்கார் கேசியிடமிருந்து வந்தது. டாக்டர் அதே போல யோசனை சொல்ல, எட்கார் கேசி குணமானார்.

பல் டாக்டருக்கு இது ஒரு புதிராக இருந்தது. அதாவது உடல் கோளாறை எட்கார் கேசி தூக்க நிலையில் அறிந்து கூறினார். அப்படியானால் எட்கார்

கேசி தூக்க நிலையில் பிறர் உடல் நிலையைக்கூட கண்டு கூறமுடியுமா? பல் டாக்டர் உண்மை அறிய விரும்பினார். தன்னிடம் வரும் நோயாளிகளை அழைத்து வந்து, எட்கார் கேசியை மயக்க நிலையில் நோயாளிகளின் பிரச்னைகளை விளக்கியது மட்டு மல்ல, குணமாகும் வழிமுறைகளையும் கூறினார்.

நாளடைவில் மருத்துவர்களால் கணிக்க முடியாத கோளாறுகளையெல்லாம் எட்கார் கேசி சரியாகக் கூறி நோயாளிகள் குணமாக உதவினார். மறுநாள் ஒரு நோயாளியின் உடல் அமைப்பைப் பற்றிக் குறிப்பிடும் போது, ''இது அவரது பூர்வ ஜன்ம பலன்'' என்று தூக்க நிலையில் குறிப்பிட்டார்.

எட்கார் கேசி ஒரு கிறிஸ்தவர். கிறிஸ்தவ மதக் கோட்பாடுகளுக்கு 'பூர்வ ஜன்ம பலன்' என்ற கருத்து அப்பாற்பட்டது. இதை உணர்ந்த எட்கார்கேசி ஏதோ சாத்தான் தன் மனத்தில் புகுந்துகொண்டு தன்னை ஆட்டுவிப்பதாகவும், இனி இப்படி மயக்க நிலைக்குச் சென்று பிறரது நோய்க் குறிகளைக் கண்டு சொல்ல முடியாது எனவும் கூறிவிட்டார்.

நல்ல வேளையாக அவரது படித்த நண்பர் ஒருவர், 'பூர்வ ஜன்ம பலன், கர்மம், ஆகாயம்' என்று அவர் தூக்க நிலையில் குறிப்பிடும் வார்த்தைகள், தொன்று தொட்டு இந்தியாவில் இந்து மத அறிஞர்கள் குறிப் பிடும் உண்மைகள் எனவும், இது சாத்தானின் வேலை யல்ல என்றும், அவர் செய்யும் காரியம் நல்ல காரியமே என்றும், பல மக்கள் அவரால் பலனடைவதையும் விவரமாக எட்கார் கேசிக்கு எடுத்துரைத்தார். பின்

எட்கார் கேசி, சுமார் ஒரு முப்பது ஆண்டுகள் இப்படிப் பலருக்கு உதவினார். அவரை ஏமாற்றுபவர் என்று பத்திரிகைக்காரர்களும், மருத்துவர்களும் தூற்றினார்கள். எட்கார் கேசியை மிகுந்த சோதனைக்கு உட்படுத்தினார்கள். எல்லாவற்றிலும் எட்கார் கேசி அப்பழுக்கில்லாமல் உண்மையான மனிதராக வெளி வந்தார். அவர் தூக்க நிலையில் கூறிய அனைத்தும் உண்மையாக இருந்தது.

மனிதரின் பெயரும், இடமும் குறிப்பிட்டுவிட்டால் அந்த மனிதர் வட துருவத்திலிருந்தாலும், அவரைப் பற்றிய அனைத்தையும், அவரது பூர்வஜன்ம வாழ்க்கையினையும் கூறினார். 'இவை அனைத்தையும், எட்கார் கேசி எங்கிருந்து பெறுகிறார்?' என்று அவர் தூக்க நிலையிலிருக்கும்போது அவரையே கேட்டதற்கு 'ஆகாயப் பேரேடு' (Akashic Records) என்று பதில் தந்தார்.

கடந்த கால சம்பவங்கள், எதிர்கால சம்பவங்கள் எல்லாம் எங்கோ ஆகாயப் பேரேட்டில் 'வழி தெரிந்தவர்கள்' பார்க்கக்கூடிய வண்ணம் பொறிக்கப்பட்டிருக்கின்றன என்பது இதிலிருந்து தெளிவாகிறது. இப்பிரபஞ்ச அறிவுடன் நம் மனத்திற்குத் தொடர்பிருக்கிறது என்பதை இது நிருபிக்கிறது.

மான்ட்ரியால் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த டாக்டர் பென்பீல்டு என்ற மூளை மருத்துவ நிபுணர் செய்த மருத்துவ அறுவை சிகிச்சை சோதனைகளும், இதையேதான் கோடி காட்டின. அதாவது மனத்திற்குக் கடந்த காலம், வருங்காலம், என்று காலப் பாகு

பாடும் இல்லை. தொலை தூரம் என்ற இடப்பாகு பாடும் இல்லை. மனம்—காலம் இடம் கடந்த நிலையில் உலவுகிறது. நம் நினைவுகளுக்கு அப்பால் செல்லும் போது இத்தகைய பிரபஞ்ச அறிவிலிருந்து உண்மை களை அறியலாம் என்று தெளிவாகிறது.

சாதாரண உருவம் படைத்த சில பெரியவர்கள், யோகிகள் அதிசயங்களைச் சாதிக்கும்போது 'எப்படி இது முடிகிறது?' என்ற கேள்வி நம்முள் எழுகிறது. அந்த ஞானிகள் பிரபஞ்ச அறிவுடன் தொடர்பு கொண்டு பிரபஞ்ச அறிவை, மனித மனம் என்ற பேருற்றின் மூலம் வரவழைத்து வழங்குகிறார்கள் என்ற முடிவிற்கே வரவேண்டி இருக்கிறது.

# 3. நமது பிரச்னைகளும் பிரபஞ்ச அறிவும்



"நாம் ஒருவரையொருவர் பார்க்கும்போது எவ்வளவு நிச்சயமும் உறுதியும் நிறைந்த உணர்வோடு பார்க்கிறோமோ, அவ்வாறு ஞானிகள் எல்லாப் பொருள்களிலும் பிரபஞ்ச அறிவைக் காண்கிறார்கள்" என்று பொருள்பட ராஜாஜி எழுதுகிறார், ராமகிருஷ்ண உபநிஷதத்தில்.

"சொல்ல முடியாத ஒரு அதீத சக்தி நம் வாழ்வைத் தொடுகிறது. அதை நான் பார்த்ததில்லை; ஆனால் உணர்கிறேன்" என்கிறார் மகாத்மா காந்தி. இப்பிரபஞ்ச அறிவு நம்மைச் சூழ்ந்திருக்கிறது. நாம் இதிலிருநதுதான் பிறந்தோம்; இன்று நாம் இதன் ஒரு பகுதியாயிருக்கிறோம். ஆக, இப்பிரபஞ்சத்திலுள்ள காற்று, கல், மண், புல், பூண்டு, தாவரங்கள், மிருகங்கள், மற்ற உயிர்கள் அனைத்துடனும் நமக்கு ஒரு தொடர்பிருக்கிறது, நமக்கு ஓர் உறவு இருக்கிறது. இதை நாம் உணரும்போது நம் மனோபாவம் வேறுபடுகிறது. அப்போது இத்தகைய மற்ற உயிர்

களுடனோ அசேதனப் பொருள்களுடனோ தொடர்பு கொள்வது எளிதாகிறது. அப்போது நம் மனத்தில் ஓர் எளிமை பிறக்கிறது; ஆண்மை மறைகிறது. விழிப்பு பெற்ற அறிவின் வெவ்வேறு நிலைகளே மண்ணும் கல்லும், தாவரமும் மிருகமும், மனிதனும் ஞானியும் என்பது இந்து மதத்தின் ஓர் அடிப்படைக் கோட்பாடாகும்.

ஒரு மாதத்திற்கு முன், முதன் முறையாக ஓர் அணுக் கூட்டத்தை மைக்ராஸ் கோப்பினடியில் பெரிதுபடுத்தி அங்கே தெரிவதை விஞ்ஞானிகள் உலகிற்குக் காட்டினர். சடப்பொருள்களினுள் இருக்கும் தனிப்பட்ட அணு இத்தனை நாள் விஞ்ஞானி எண்ணி வந்ததுபோல சும்மா ஆடாமல் அசையாமல் கிடக்கவில்லை. அணுக்கள் அங்கே அசைந்து கொண்டிருக்கின்றன. அங்கே ஓட்டம் இருக்கிறது. அங்கே உயிர் இருக்கிறது என்று சொல்லலாமா? இல்லாவிட்டால் உயிர் என்பதுதான் என்ன?

பல புகழ்பெற்ற பௌதிக விஞ்ஞானிகளின் ஆராய்ச்சி முடிவுகள், ஆராய்ச்சிக்கு அப்பாலிருக்கும் அறிந்து கொள்ள முடியாத ஒரு சக்தியை—பிரபஞ்ச சக்தியைப் பற்றியதாக முடிகிறது. மருத்துவ ஆராய்ச்சியாளர்கள் இன்று நமது உடலிலுள்ள ஒவ்வொரு செல்லிலும் உயிரும் அறிவும் இருப்பதாக அபிப்பிராயப்படுகின்றனர். ஒருவகைக் கோலாட்டத்தின் போது, தொங்கும் எல்லாக் கயிறுகளையும் உயரே உச்சியில் முடித்திருப்பார்கள். அதுபோல, இப்பிரபஞ்சத்தின் எல்லா இயக்கங்களும் ஏதோ

ஓரிடத்தில் முடிந்திருப்பதாக — ஆரம்பிப்பதாக — தோன்றுகிறது.

அப்பிரபஞ்ச அறிவுடன் நாம் ஐக்கியமாவது, தொடர்பு கொள்வது நமது வாழ்க்கைக்குப் பெரிதும் பயன் தரும்.

எல்லாவற்றிற்கும் ஊன்றுகோல், ஆதார சக்தி அதுதான்.

பிரபஞ்ச அறிவைக் காட்ட முடியுமா, காண முடியுமா என்று சிலர் கேட்கிறார்கள். அது சொந்த அனுபவம். அதைப் பல வழிகளில் பெறக்கூடும் என்று பெரியவர்கள் வழி காட்டிவிட்டுப் போயிருக்கிறார்கள். அறிவு மூலம்—கேள்வி கேட்பதன் மூலம் உணர முயல்வதே ஞானவழி என்றும், பிறருக்குத் தொண்டு செய்வதன் மூலம் அதை உணர முயல்வது கர்ம வழி (தொண்டுப் பாதை) எனவும், ஈடுபாட்டின் மூலம்—உணர்வு மூலம்—பக்தி மூலம் தொட முயல்வது பக்தி மார்க்கம் எனவும், 'சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற திற'த்தை வளர்ப்பது தியான மார்க்கம் எனவும் வகுத்திருக்கின்றனர் பெரியோர். நமது ஞானத் தந்தையர் வகுத்த வழிகளெல்லாம், இன்று மேனாட்டு விஞ்ஞானத்தின் கூரிய ஆராய்ச்சிகளுக்குட்பட்டு, ஆதாரங்களுடன் விஞ்ஞான உண்மைகளாக வெளி வந்து கொண்டிருக்கின்றன. நமது நம்பிக்கைகள் வலுப்படுகின்றன.

ஒரு சீடன் கேட்டான் ஞானியைப் பார்த்து, "ஞானியே, எதை அறிந்தால் இப்பிரபஞ்சத்திலுள்ள எல்லாவற்றையும் (சுகம், துக்கம், வாழ்வு, இறப்பு) அறிந்து கொள்ளலாம்?" என்று.

ஞானி கூறினார்: "மண்ணாலான பொருள்களைப் பற்றி அறிய மண்ணின் தன்மைகளை அறிய வேண்டும். அதே போல, எல்லாவற்றையும் அறிய, அவை பற்றி சிந்தனை எழும் இடமான மனத்தைப் பற்றி — ஆத்மாவைப் பற்றி — அறிந்து கொள்ள வேண்டும்."

மனத்தைப் பற்றி அறிந்து கொள்ளும் முயற்சிக்கு பல படிகள் இருக்கின்றன. ஒழுக்கம், நியதி, உண்மை என்ற அடிப்படையில் உலகமும் மனித வாழ்வும் அமைந்திருக்கின்றன. இதுவே சமுதாயத்தின் ஆணி வேராய் இருக்கிறது. இதற்கு மேல் மனிதன் கட்டுப் பாட்டைக் கற்றுக் கொள்ளவேண்டும். முதல் கட்டுப் பாடு: உடல் இயக்கக் கட்டுப்பாடு. பலவித உடற் பயிற்சிகள் மூலம் ஆத்மா குடியிருக்கும் இப்புனித உடலினை நல்ல நிலையில் நமது கட்டுப்பாட்டுக்குள்— கொண்டு வரவேண்டும். அடுத்து வருவது மனக் கட்டுப்பாடு. மனித மனத்தில் சிந்தனைகள் மாறி மாறித் தாவிக் கொண்டிருக்கும். எல்லாவித சிந்தனை களையும் ஒரு சிந்தனையாக்கி அதில் மனத்தை நிலைப் படுத்த வேண்டும். பின் அச்சிந்தனையை ஆழ ஆழ சிந்தனை தோன்றுமிடத்திற்கு எடுத்துச் செல்ல வேண்டும். அப்போது மனம் இப்பிரபஞ்சத்துடன் ஐக்கியமாகிறது. உடல், உள்ளம், ஆத்மா எல்லாம் அங்கே ஒருங்கிணைகிறது; ஒருமுகப்படுகிறது. ஒரு கட்டுப்பாடு தோன்றுகிறது. ஒரு சக்தி பிறக்கிறது. பல சமயம் அந்த ஒருங்கிணைந்த நிலையிலிருந்து வெளிவர வேண்டாம் என்று எண்ணும் ஒரு பேரமைதி பெரு மகிழ்ச்சி தோன்றுகிறது. சமாதி என்றும், ஐக்கியம் என்றும் இதைக் கூறுகிறார்கள்.

வடலூரார் இதையே அருட்பெருஞ்சோதி என்றும் தனிப் பெருங்கருணை என்றும் வருணிக்கிறார்.

"என்ன, சாமியாராக வழி சொல்லிக் கொடுக்கிறீர்களா?" என்று பலர் யோசிக்கக்கூடும். அல்ல. இந்நிலையும் இவ்வழியும் சாமியார்களுக்கும் துறவிகளுக்கும் மட்டுமே வேண்டுவதல்ல. நம்மைப் போன்ற எல்லா மனிதர்களுக்கும் உடனடியாகத் தேவைப்படும் ஒன்று இது. அதனால்தான் பல தலைவர்களும் பல துறவிகளைச் சந்திப்பதைப்பற்றி நாம் கேட்கிறோம்; படிக்கிறோம்.

ஞானிகளிடம் என்ன காண்கிறோம்? என்ன பெறுகிறோம்? என்ன நேருகிறது நமக்கு? என்ற கேள்விகளின் பதில்களை அவரவர்களேதான் சொல்ல வேண்டும். ரமணர் எந்த ஞானியிடத்தும் போகவில்லை. தானாகப் போய் ஒரு தனி இடத்தில் அமர்ந்தார். கேள்விகளை எழுப்பினார்.

"ஏன் இந்த தியான முறை, சாதாரண மக்களுக்கு?" என்ற கேள்விக்குப் புத்தர் கூறிய ஒரு கதையைத்தான் இங்கே கூறவேண்டும்.

ஒரு மனிதனைப் புலி விரட்டியது. ஓடினான். ஓடினான். உயரே ஒரு மரவிழுது தொங்கிக் கொண்டிருந்தது. நல்ல வேளையாக அதைப் பற்றிக் கொண்டான். கீழே பார்த்தான். நேர்க் கீழே மற்றொரு புலி நின்று உறுமிக் கொண்டிருந்தது. அஞ்சிப் போய் அண்ணாந்து பார்த்தான். அங்கே ஓர் எலி மர விழுதை வேகமாகக் கடித்துக் கொண்டிருந்தது. என்ன செய்வது? அருகில் பார்த்தான். ஒரு செடியில் சாப்பிடக் கூடிய பழங்கள் காய்த்துக் கனிந்திருந்தன. பறித்து

வாயில் போட்டுக் கொண்டான். "ஆகா! என்ன ருசி! என்ன ருசி! என்ன ஆனந்தம்" என்றான்.

அதுபோல வாழ்வில் பிரச்னைகள் வருவது சகஜம், கஷ்டங்களும் துன்பங்களும் வருவது இயல்பு. மனிதன் புலி விரட்டிய இக்கட்டான நிலையிலும் பழத்தைச் சுவைத்து அனுபவித்ததுபோல, நாம் இவ்வுலக வாழ்க்கையை வாழ ஒரு சந்தர்ப்பம் என எண்ணி வாழ வேண்டும்; அனுபவிக்க வேண்டும். அந்தப் பாதையில் பிரபஞ்ச அறிவுடன் தொடர்பேற்படுத்திக் கொள்ள லாம்; நமது வாழ்க்கைக்கு அந்த அறிவைப் பயன் படுத்திக் கொள்ளலாம். பிரபஞ்ச அறிவு நமக்கு எதிரி அல்ல; புரியாத சூட்சுமம் அல்ல. அது நமக்கு உதவவே காத்திருக்கிறது.

# 4. தியானம் ஒரு மனப்பயிற்சி



சில விஷயங்கள், நமக்கு அருகில் இருக்கும் போது, அதன் முக்கியத்துவம் நமக்குப் புரிவதில்லை. நமக்கு எளிதில் கிடைக்கக்கூடிய பொருள் என்பதனால் ஒருவகை அலட்சியம்—உதாசீனம்—நம்மிடை மேவு கிறது. சில மனிதர்களின் அருமை பெருமைகளை அவர்கள் அருகில் இருப்பதனால் நாம் உணர்வதில்லை. நாம் பார்க்கும் வேலையிடத்தும், நாம் நெருங்கிப் பழகும் மனைவி மக்களிடத்தும், கணவனிடத்தும் இத்தகைய 'அசிரத்தை' சகஜமாக எழுகிறது. அதே போலத்தான் தத்துவங்களும். அவற்றை நம் முன்னோர் நமக்காக எழுதி வைத்துவிட்டுப் போயிருக் கிறார்கள். சொல்லிக் காட்டியிருக்கிறார்கள் என்பத னால் அந்த 'தெரிந்த விஷயம்' நாம் அதைப் பூரண மாக உணர முடியாதபடி செய்துவிடுகிறது. காந்தீயம், யோகம், தியாகம், பரம்பொருள், தியானம் என்கிற பல வார்த்தைகளையும் நாம் கேட்டுக் கேட்டு அவற்றில் நமக்கு அலட்சியம்—ஏன் வெறுப்புக்கூடத் தோன்று கிறது. அவையெல்லாம் அர்த்தமில்லாத வெறும்

வார்த்தைகளாக நம் முன் நின்றுவிடுகின்றன. அதனால் அதன் பொருளையும் அதன் பயனையும் பெரும்பாலோர் உணர்வதில்லை; ஆழ்ந்து சிந்திப்ப தில்லை.

யோகம், தியானம், முத்திநிலை என்கிற வார்த்தை களைப் பற்றித்தான் நான் மனத்தில் கொண்டு இதை எழுதுகிறேன். காதல் என்பதைக் கதையில் படிப்பதற் கும், நேரில் அனுபவிப்பதற்கும் எவ்வளவோ வித்தியாசம் இருக்கிறது. சர்க்கரையைத் தாள் பொட்டலத்தில் பார்ப்பதற்கும் வாயில் போட்டுச் சுவைப்பதற்கும் எவ்வளவோ வேறுபாடு இருக்கிறது. சுவைத்தவர்கள் 'சொல்ல இயலாது' என்கின்றனர். சுவைக்காதவர்களோ 'சோம்பேறிகள்' என்றோ 'கதைக் கிறார்கள்' என்றோ கூறித் தங்கள் அறியாமையை, அனுபவமின்மையைப் பெருமையாக்கிக் கொள் கின்றனர். "இருளடைந்த நாடிதென்று எவரோ சொன்னார். இருளும் ஒரு பெருமை என எண்ணி வாழ்ந்தேன்" என்று நம் அறியாமையைப் பெருமை யாக எண்ணி இறும்பூதெய்துகிறார்களே அவர்கள் திருந்த விரும்பாதவர்கள்; திருத்த முடியாதவர்கள்.

நம்மை நாமே அறிந்து கொள்ளும் முயற்சியை ஏன் பள்ளிக்கூடங்களில் போதிப்பதில்லை என்று என்னை நானே கேட்டுக் கொள்கிறேன். 'மூலாதார சக்தி நம் மனத்தினுள் உறைந்திருக்கிறது' என்பதை ஏன் நமது குடும்ப, சமுதாயச் சடங்குகள் நமக்குப் போதிப்பதில்லை என்று என்னை நானே கேட்டுக் கொள்கிறேன். சில இடங்களில், சில குடும்பங்களில் இது நிலவுகிறது. ஆனால், காலம் போகிற போக்கில்

இந்த அடிப்படை உண்மைகள் வேகமாக முக்கியத் துவத்தை இழந்து வருகின்றன.

"சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற திறமரிது. சத்தாகி என் சித்தமிசை குடி கொண்ட அறிவான தெய்வமே தேசோ மயானந்தமே!" என்று தாயுமானவர் பாடினாரே அந்தச் சிந்தையை அடக்கும் திறனைத்தான் 'நம்மை நாமே அறிந்து கொள்ளுதல்' என்று குறிப்பிடுகிறார்கள்.

இவைபற்றி விஞ்ஞானிகள் கூறுவதைக் கேட்க லாம். அமெரிக்காவில் ஹார்டுவர்டு பல்கலைக் கழகத்தி லும் கலிபோர்னியா பல்கலைக் கழகத்திலும் பலரைத் தியானம் செய்யுமாறு கூறி அவர்களது ரத்த அழுத் தம், இதயத் துடிப்பு, ஆசனவாயின் வெப்பநிலை, தோலின் உணர்வு (எதிர்ப்புச் சக்தி), மூளையின் மின் துடிப்பு முதலியவற்றை மருத்துவக் கருவிகொண்டு சோதித்தனர்.

தியானத்தின்போது நமது ஆக்சிஜன் தேவை (மூச்சிழுக்கும் காற்றில் உள்ள) குறைந்தது. அதே போல வெளிவரும் மூச்சில் கார்பன்டை ஆக்சைடின் அளவும் குறைந்தது.

அதாவது மனிதன் நல்ல நினைவுடன் விழிப்பு நிலையில் இருக்கும்போது — தியானம் செய்தவன் மூலம், தூக்க நிலையையும் கடந்த ஓர் உரிய ஓய்வை உடல் பூரணமாக அனுபவிக்கிறது என்று கண்டார். நமது உடலின் உள்ளே நிகழும் உணவு மாறு பாடுகள், ரசாயன மாற்றங்கள் எல்லாம் சுமார் 20 சதம் குறைகின்றன என்று கண்டார்கள்.

இதையெல்லாம்விட தியானம் செய்பவர்கள், தாங்கள் அனுபவித்த மனநிலைபற்றித் தெரிவித்த

கருத்துக்கள், நம் கண்களைத் திறப்பனவாக இருக்கின்றன.

'தியானம் செய்யும்போது மனம் ஒரு கட்டுப்பாட்டில் இருக்கிறது. ஒரு நெறியில், ஓர் அமைதியில் எங்கோ ஏதோ ஒன்றுடன் ஐக்கியமாகி விடுகிறது. இதன் விளைவாக, செய்யும் காரியங்களில் ஒரு தெளிவு ஏற்படுகிறது. ஓர் ஆக்க சக்தி நமது வேலைகளில் வெளிப்படுகிறது. ஒரு நிதானம் நம்மிடை நிலவுகிறது. நமது சூழ்நிலை நமது கைக்குள் இருப்பதாக ஓர் உணர்வு ஏற்படுகிறது. தினம் காலையிலும், மாலையிலும் ஒரு பதினைந்து நிமிடம் இப்படித் தியானம் செய்வது மற்ற இருபத்திமூன்றரை மணி நேரத்தையும் சிறப்பாகவும், பயனுடையதாகவும் ஆக்கிவிடுகிறது'' என்கிறார்கள்.

ஹார்டுவர்டு மருத்துவப் பேராசிரியர் டாக்டர் பென்சன் கூறுவதைக் கேட்கலாம்; ''தியானத்தின் போது இதயத் துடிப்பு நிமிடத்திற்கு மூன்று தரம் குறைவாகத் துடிக்கிறது. நமது மூளை, ஒரு நல்ல தூக்க நிலையின் போது உண்டாகும் 'ஆல்பா' நிலையினை அடைகிறது. மின்சக்தியை எதிர்க்கும் சுமார்—ஒரு மரத்துப் போன தோல் உணர்வு நிலை—சுமார் நான்கு மடங்கு அதிகமாகிறது. மனிதர்கள் மிக அமைதி அடைந்தவர்களாகக் காணப்படுகிறார்கள்.''

டாக்டர் பென்சனும், கீத்வாலஸ் என்ற கலிபோர்னியா பல்கலைக் கழகத்து டாக்டர் பட்டம் படிக்கும் மாணவரும் தியானம் பற்றிச் செய்த இந்த ஆராய்ச்சியை அமெரிக்காவில் புகழ்மிக்க விஞ்ஞான

ஏடான 'விஞ்ஞானம்' (Science) பிரசுரித்தது. மற்ற எல்லா மருத்துவ வெளியீடுகளும் அவர்களது பல ஆராய்ச்சி முடிவுகளை வெளியிட்டன.

சுமார் ஐந்தடி உயரமும், கீச்சுக் குரலும், வெள்ளையும் கறுப்பும் கலந்த தாடியும், ஒரு வெள்ளை வேஷ்டியினால் உடம்பைப் போர்த்தியிருக்கும் ஓர் இந்திய சாமியார் (மகரிஷி மகேஷ் யோகி) தியானத்தின் பலனை எடுத்துச் சொன்னபோது, உலகம் சிரித்திருக்கக் கூடும். ஆனால் அந்த உண்மைகள் ஹார்டுவர்டு, கலிபோர்னியா பல்கலைக் கழகங்களின் ஆராய்ச்சிக் கூடங்களின் முத்திரையைத் தாங்கி வெளிவந்தபோது உலகம் சற்று நின்றது. "உண்மையா..." "அப்படியா!" என ஆச்சரியக்குறியை எழுப்பியது.

மனநிலை மூலம் உடல் மாற்றங்களைக் கட்டுப் படுத்தலாம் என்பதும், அதை அறிவுபூர்வமான நினைவு நிலையிலிருந்து சாதிக்கலாம் என்பதும் நெருக்கடியில் வாழும் அமெரிக்க சமுதாயத்திற்கு வரப்பிரசாதமாகத் தோன்றியது.

'ரிசர்ப்பின்' என்றும், 'குளோர் புரோமைசின்' எனவும் ஏராள மருந்துகளைக் கோடிக்கணக்கான ரூபாய்க்கு வாங்கி, ஒரு செயற்கை அமைதி பெறுகிறது—வளர்ந்துவரும் மனித சமுதாயம். ஆனால் இதோ ஒரு சிறு குள்ள உருவம், ஒரு தாடிக்காரர், 'கெக்கெக்கே' என்று சிரித்துக் கொண்டு கூறுகிறார்:

"ஏன் மாத்திரைகள்? ஏன் வீண் பணச் செலவு? மூக்கைப் பிடித்துக்கொண்டு, அல்லது கைகளை முழங்

காலின்மீது வைத்துக்கொண்டு கண்ணை மூடிக் கொண்டு தினம் பத்து நிமிடம் தியானம் செய்யுங்கள். அவ்வளவுதான்'' என்கிறார்.

‘‘எப்படி?'' என்று கேட்கிறார்கள் எல்லோரும் ஆவலோடு.

‘‘எல்லாம் ஒரு மந்திரம்!'' என்று சொல்லி மீண்டும் அவர் சிரிக்கிறார்.

அது என்ன அது, மந்திரம்.

# 5. தியானமும் விஞ்ஞானமும்



அமெரிக்காவில் மூன்றில் ஒரு பங்கு மக்கள் ரத்த அழுத்தத்தாலும், வாழ்க்கை நெருக்கடிகளினாலும் அல்லலுறுகிறார்கள். மனநோய் உடல் நோயாகி மருந்து சாப்பிடவேண்டி இருக்கிறது. அல்லது மன சிகிச்சை நிபுணர் அலுவலகத்திற்கு நடக்க வேண்டி இருக்கிறது.

'அறியப்படாத மனிதன்' (Man the unknown) என்ற புகழ்பெற்ற புத்தகத்தை எழுதிய பிரபல மருத்துவ விஞ்ஞானி அலெக்சி காரல், மனித மனத்தில் எழும் நம்பிக்கையைப் பற்றிக் குறிப்பிடுகிறார். கோயில் போன்ற சில புனிதமான இடங்களில் சிலசமயம் திடீரென்று நோய் குணமாவதைப்பற்றி அவர் எழுது கிறார். நோய் குணமாக உடலில் இயற்கையான —ஒரு முறை செயல்படுகிறது. ஆனால் அதில் நம்பிக்கை சேரும்போது குணமாகும் முறை வேகமடைகிறது என்கிறார் அவர்.

"ஒரு சதவிகித மக்கள் ஒரு நாட்டில் தியானம் செய்வார்களானால் அந்த நாட்டில் பத்து சகவிகித குற்றமும், களவும், கொலையும் குறையும்" என்று நமது ஊர் ஞானி ஒருவர் ஒருமுறை குறிப்பிட்டார். தனி மனித தியான சக்தி, சில காரியங்களைத் தனிப்

பட்ட அளவில் சாதிக்கும் போது, ஒரு சமுதாயத்தின் கூட்டுத் தியான சக்தி—எண்ண சக்தி—ஏன் பெரிய காரியங்களைப் பெரிய அளவில் சாதிக்க முடியாது? சிந்தித்துப் பார்க்க வேண்டிய விஷயம்.

அமெரிக்காவின் புகழ்பெற்ற இல்லினாய் மாநில சட்டசபை 'தியானத்தினால் ஏற்படும் நலன்களைப் பாராட்டி' சட்டசபையில் ஒரு தீர்மானத்தை நிறை வேற்றியது. அமெரிக்கா ராணுவக் கல்லூரி தியான மார்க்கத்தைப் போர்வீரர் பயிற்சியில் பாடமாகப் போதிக்கத் துவங்கியது. மற்றெல்லாப் பல்கலைக் கழகங்களும், கல்லூரிகளும், ஏதாவது ஒரு பாடமாவது யோகத்தைப் பற்றியோ, தியானத்தைப் பற்றியோ மாணவர்களுக்கு இப்போது சொல்லிக் கொடுக்காமல் இல்லை.

சனாதனிகள் எனப்படும் தொழில் துறை சம்பந்தப் பட்டவர்கள் தியான மார்க்கத்தைப் பயின்றதன் விளை வாகஅவர்களது படபடப்பும் ரத்த அழுத்தமும் குறைந்த தாகவும் ஒரு நிதானமும் நெருக்கடிகளை முன்னைவிட மேலான நம்பிக்கையுடன் சமாளிக்கும் நிலையும் கூடியதாகவும் குறிப்பிட்டார்கள். மனம் காரணமாக எழும் உடல் நோய்கள் வெகுவாகக் குறைந்தன.

"எப்படி தியானம் செய்வது? அது என்ன அது? மந்திரம்?" என்ற கேள்வி எழுந்தபோது, 'ஓம்' என்ற வார்த்தை 'ஓங்கார' ரூபமாய் எங்கும் ஒலித்தது. ஹார்டுவர்டு பல்கலைக் கழகத்து பென்சன் பார்த்தார். 'என்ன இது 'ஓம்?' ஏன் இந்த வடமொழி வார்த்தை? ஏன் இந்த இந்துமதக் கலப்பு?' என்று எண்ணி தியான

மார்க்கத்திலிருந்து அதன் எல்லாவித இந்து மதத் தொடர்புகளை-சொற்களை,-அகற்றிவிட விரும்பினார்.

ஓம் என்பதற்குப் பதில் 'வண்டி வண்டி' என்றோ, 'சாப்பாடு சாப்பாடு' என்றோ அல்லது தனக்குப் பிடித்த சினிமாநட்சத்திரத்தின் பெயரைச் சொன்னால் தியானம் பலன் தருமா என்று பலர் விதண்டா விவாதமான— தர்க்க ரீதியாக—கேள்விகளை எழுப்பினார்கள். பென்சன், தியானத்திற்குப் பயன்படுத்தப்படும் சொற் களை ஆராய்ந்தார். அதில் வல்லினம் ஏதும் இல்லை. மெல்லின ஒலி இருந்தது. உயிரெழுத்தின் ஒலி இருந்தது. அப்படி இப்படி, இந்துமதத்திற்கு அப்பாற் போய் அவர் கண்டுபிடித்த சொல்—ஒலி—'ஒன்று '(one) என்பதாகும். தியானம் செய்யும்போது 'ஒன்' என்று கூறினால் முன் கூறிய அதே பலன் ஏற்படுகிறது என்று காட்டினார்.

உடனடியாக உலகெங்கிலுமுள்ள தத்துவ ஞானிகள் 'ஒன்று' என்ற வார்த்தை (ஒருவனே தேவன் என்பது போல) எல்லா மதங்களிலும் அதிகப் பொரு ளுடன் உபயோகிக்கப்படும் வார்த்தை என்பதை எடுத்துக் காட்டினார்கள். கடைசியாக, சொல்லுக்கு வடமொழி, இந்துமதம் என்றே பாகுபாடு கிடையாது; அது ஓர் அடிப்படை ஒலி; இணைக்கும் ஒலி; மனித ஆத்மாவின் குரல்—இதில் மனத்தைப் புகுத்துவதோ, பிரிப்பதோ முட்டாள்தனம் என்பதை உணர்ந்தார்.

மந்திரம் என்பது என்ன? ஒரு சொல். ஓர் ஒலி நம்மையும் பிரபஞ்சத்தையும் இணைக்க உதவும் ஓர் ஓங்கார இசைப்பாலம். அது ஓம் என்றிருக்கலாம்,

சிவாய நம என்றிருக்கலாம், ராம என்று இருக்கலாம். மணி பத்ம என்றிருக்கலாம். 'புத்த' என்றிருக்கலாம். வேறு எதுவாக வேண்டுமானாலும் இருக்கலாம். அது உங்கள் இயல்புக்கு ஏற்ற ஒலியாக இருக்க வேண்டும். நமக்கு ஏற்றதை நாமே தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். அல்லது நமது வழிகாட்டிகளிடமிருந்து பெறலாம்.

இந்த ஒலி என்ன செய்கிறது?

உரக்க, ஓர் இரண்டு நிமிடம் ஓம் என்று சொல்லிப் பாருங்கள், புரியும். நமது நினைவு அறிவை அது மறக்கச் செய்கிறது. சமப்படுத்துகிறது. அந்த ஒலியில் நமது தர்க்க ரீதியாகச் சிந்திக்கும் அறிவு ஆழ்ந்து போகிறது. நாய்க்கு எலும்பைத் தூக்கி எறியும்போது நாய் அதைக் கடித்துக் கொள்வதைப்போல. நாயின் குரைத்தல் சப்தம் இப்போது இல்லை. அந்தத் தொல்லை இல்லை. இனி நாம் பயணத்தைத் தொடரலாம்.

"பௌதிகத்தில் நிரந்தர மின் ஓட்டம் (Super conductivity) என்ற ஒரு நிலை இருக்கிறது. அதேபோல மனம் தியான அமைதியில் இருக்கும் போது அங்கே ஒரு நிரந்தர ஓட்டம் ஏற்படுகிறது" என்று ஒரு விஞ்ஞானி அதை வருணிக்கிறார். "மருந்தின் துணை இல்லாமல் மனத்தை அமைதிப்படுத்துவது—உடலை அமைதிப்படுத்துவது ஓர் அபார சாதனை" என்று மேனாட்டு மருத்துவ அறிஞர்கள் அபிப்பிராயப்படு கின்றனர். "மருந்தின் மூலம் மனித மனத்தைக் கட்டுப்படுத்தும் போது நம்மைக் கட்டுப்படுத்தும் சக்தியை ஒரு வெளிப் பொருளிடம் ஒப்படைக்கிறோம். ஆனால் மருந்தில்லாமல் மனித மனத்தை — மனித

மனத்தின் மூலமே (தியானத்தின் மூலம்) கட்டுப் படுத்தும்போது நாமே எஜமானர்களாக இருக்கிறோம்'' என்று அறிஞர்கள் கூறுகிறார்கள்.

தியானம் செய்த பலர் கூறுகிறார்கள்: 'தியானத் தின்போது ஏதோ எல்லையற்ற, இடத்திற்குச் செல்வது போலவும், சாவு இல்லாத உலகில் வாழ்வதாகவும் அசாதாரண ஆக்க சக்தி பிறப்பதாகவும்' அவர்கள் கூறினார்கள்.

மனிதனது பால் உறுப்புக்களில், கரு உற்பத்தி யாகுமிடத்து, காமமல்லாத ஓர் உணர்வையும் ஒரு விழிப்பையும் அனுபவித்ததாக தியானம் செய்த பலர் கூறினார்கள். நமது மறை நூல்களோ இதையே குண்டலினி சக்தி என்றும், அது அடியிலிருந்து புறப் பட்டு முள்ளந்தண்டு வழியே மூளையின் பகுதியான பைனியல் சுரப்பியில் (Pineal Gland) கலக்கிறது என்றும் அப்போது 'உள்ளொளி' பிறப்பதாகவும் ஆத்மா 'விழிப்பு' பெறுவதாகவும் குறிப்பிடுகின்றன.

ஸ்வீடிஷ் பல்லைக் கழகம் குண்டலினி சக்தி பற்றி ஆராய்ந்து வருகிறது.

வால்டர்ஹெஸ் என்ற சுவிட்சர்லாந்து நாட்டு நோபெல் பரிசு பெற்ற மருத்துவ விஞ்ஞானி, மூளை பற்றிய ஆராய்ச்சி செய்தார். சோதனைக்கு அவர் பூனையை எடுத்துக் கொண்டார். நமது எல்லாக் காரியங்களையும் ஓர் ஒழுங்கில் நிலை நிறுத்தும் அந்த முக்கியமான இடம் மூளையில் எங்கே இருக்கிறது என்பதே அவர் கேள்வி. எல்லாவற்றையும் கட்டுப் படுத்தும் இடம், மூளையில் ஹைப்போதாமஸ் என்ற

பகுதியின் (Hypothalamus—Anterior) முன்பக்கம் என்று அவர் காட்டினார்.

நமது தியானம் அந்த இடத்திற்குத்தான் செய்தி அனுப்பி மனத்தை அமைதிப்படுத்துகிறது என்று அபிப்பிராயப்படுகிறார்கள், விஞ்ஞானிகள்.

அமைதியான சூழ்நிலை, ஓர் இயல்பாக அமர்ந்த நிலை, அத்துடன் நினைவு, மனத்தை அமைதிப்படுத்த ஒரு சொல்—அப்போது மனம் ஒருமைப்படுகிறது. அப்போது நாம் மூச்சு விட்டுக்கொண்டு இருப்பதை உணரத் துவங்குவோம்.

ஓம் எனலாம், சிவாய நம எனலாம், யேசு என்றோ அல்லா என்றோ கூறலாம். தியானத்திற்கு மதம் இல்லை. அது ஒரு முறை, அவ்வளவுதான்.

நம்மை நாமே அறிந்துகொள்ள ஒரு முறை. நம்மில் இருக்கும் மாபெரும் சக்தியை அறிந்துகொள்ள ஒரு முறை.

# 6. ஞானிகள் காட்டும் வழி



**வி**ஞ்ஞான பூர்வமாக தியானத்தை அறிந்து கொள்ளும்போது 'படித்தவர்'களுக்கு ஒரு நிம்மதி ஏற்படுகிறது. நம்பலாம் என்று எண்ணுகின்றனர். விஞ்ஞானம் சுமார் இருநூறு ஆண்டுகளில் வளர்ந்த அறிவு. இதன்மூலம் எதையும் சீர்தூக்கிப் பார்க்கும் போதுதான் பலருக்குத் திருப்தி ஏற்படுகிறது.

மனித சமுதாயம் வளர வளர தர்க்கவாத அறிவில் —காரண காரியம் காட்டும் அறிவில்—நாம் தீவிரமாக ஈடுபட ஆரம்பித்துவிட்டோம். நியாயமான முறையில் ஆதாரத்துடன் வாதம் செய்பவர்கள் நம்மை ஈர்க்கிறார்கள். ஆனால் நமது முன்னோர்களும் ஞானிகளும் சட்டென்று சில உண்மைகளைக் கண்டார்கள், கடைப்பிடித்தார்கள், பலன் கண்டார்கள். நியாய வாதங்களினால் தங்களது தர்க்கவாத அறிவைத் திருப்திப்படுத்தி விட்டுத்தான் உண்மைகளை அறிந்து கொள்வேன் என்று அவர்கள் வாளாவிருக்கவில்லை.

ஒரு விடுகதைக்கு, ஒரு புதிருக்குச் சட்டென்று விடை காண்பதுபோல நமது ஆழ்மனம் சில உண்மைகளை, காரண காரியம் காட்டும் அறிவுலகைத் தாண்டி எடுத்துக் காட்டுகிறது.

அந்தக் காலத்தில் ஹார்டுவர்டு பல்கலைக் கழகங்கள் இல்லை. சில பெரியவர்கள் இருந்தார்கள். அவர்களிடம் சென்று தெரிந்துகொள்ள விரும்பியவர்கள், தெரிந்து கொள்ள முயன்றார்கள். அந்தப் பெரியவர்கள் சொல்லிக் கொடுத்த பாடம் என்ன? சொல்லிக் கொடுத்த முறைகள் யாவை? இக்கேள்விகளுக்குப் பதிலளிக்க முயல்வோம்.

தியானமும், யோக முறைகளும் நமக்குச் செய்யும் நன்மைகளை விவரமாகக் கேட்ட பல அமெரிக்க இளைஞர்கள் கலிபோர்னியாவிலிருந்து ஒரு விமானத்தை இதற்கென 'சார்ட்டர்' செய்து இமய மலையின் அடிவாரத்திற்கு வந்து சேர்ந்தனர். ஞான மார்க்கத்தைத் தெரிந்து கொள்ளப் போகிறோம் என்ற கரை கடந்த உற்சாகத்தில் அவர்கள் இருந்தார்கள். பெரிய மாறுதலையும், ஞானோதயத்தையும் எதிர் பார்த்தவண்ணம் ஞானியை அணுகினார்கள்.

''குருவே! தியான மார்க்கங்களை அறிந்துகொள்ள அமெரிக்காவிலிருந்து வந்திருக்கிறோம்'' என்று ஆவலை வார்த்தைகளால் வெளியிட்டார்கள். ஞானி கூறினார்: ''சுவரைப் பார்த்து உட்கார்ந்து எத்தனை மூச்சு விடுகிறீர்கள் என்பதை எண்ணிக் கொண்டிருங்கள், வருகிறேன்'' என்றார்.

வந்தவர்களுக்குப் பெரிய ஏமாற்றமாய்ப் போய் விட்டது. 'என்ன இது! எவ்வளவு தொலைவிலிருந்து, எவ்வளவு எதிர்பார்த்து ஆர்வத்துடன் வந்திருக்கிறோம். மனிதர் ஒன்றும் புரிந்து கொள்ளாதவராக இருக்கிறாரே, என்ன ஞானி இவர்!' என்று எண்ணினார்கள்.

பெரிய பிரசங்கத்தின் மூலம், உபமான உபமேயங் களுடன் தர்க்கவாதமாக, நமது ஊர் அரசியல் வாதிகள் போல போதையூட்டும் வண்ணம் எல்லாவற்றையும் விளக்குவார்கள் என்று பலர் எதிர்பார்க்கிறார்கள். அங்கே விளக்க ஒன்றும் இல்லை. அது ஓர் அனுபவம். அது ஒரு சுயமுயற்சி. அதற்குப் பொறுமை தேவை. விடாமுயற்சி தேவை.

ஞானிகள் வெவ்வேறு நாடுகளில் இதை எப்படி அணுகுகிறார்கள் என்பதைப் பார்க்கலாம்.

தியானம் என்பது புத்தர் காலத்தில் சைனாவுக்குச் சென்று 'சேன்' என்ற பெயரைப் பெற்றது. பின், ஜப்பானுக்குச் சென்று 'சென்' என்று ஆகியது. இப்போது அதையே 'சென் புத்த மதம்' என்று அழைக்கிறார்கள்.

சென் புத்த மதத்தைச் சேர்ந்த துறவிகள் தங்கள் மாணவர்களுக்குப் போதித்ததைக் குட்டிக் கதை களாகத் தொகுத்திருக்கிறார்கள்.

அந்தக் குட்டிக் கதைகள் எல்லாம் விடுகதைகளாகப் புதிர்களாக இருக்கின்றன. தர்க்கவாத அறிவின் பயனற்ற தன்மையை வெளிப்படுத்தி, மாணவனை நேரடியாக 'உணர'ச் செய்யும் வழியே சென் மார்க்க மாகும். உணர்கின்ற நிலையை மகாசூன்யம் என்றார்கள். இவ்வுலகமும், இப்பிரபஞ்சமும் உருவா வதற்கு முன்னிருந்த ஒரே பொருள்தான் மகாசூன்யம் என்கின்றனர். அந்த நிலையை ஜப்பானிய மொழியில் 'சட்டோரி' என்று கூறுகின்றனர்.

அந்த 'உணர்வு' எதை உணர்த்துகிறது? இப்பிர பஞ்சத்திலுள்ள எல்லாப் பொருள்களிலும், எல்லா உயிர்களிலும் ஒரே சக்தி உலவி நிற்பதை; இரண்டா வதாக எல்லாப் பொருள்களும், உயிர்களும் ஒன்றுக் கொன்று தொடர்பு கொண்டிருப்பதை.

நாம் எல்லாவற்றிலும் இருக்கிறோம் என்பதையும் அந்த எல்லாப் பொருள்களும், நம்மில் வாழ்கின்றன என்பதும்தான் அந்த மகத்தான உண்மையாகும். இதனால் வாழ்க்கை ஓர் இனிமையுடன், அமைதியுடன் இயங்குகிறது. நமது ஆணவம், வறுமை, பயம், வலி, நோய், குறைகள் அனைத்தும் அங்கே அந்த எண்ணத் தில் ஒன்றாகக் கரைந்து மறைந்து விடுகின்றன.

மலையிடத்தும், மண்ணிடத்தும், சிறு குளவி யிடத்தும் நாம் அன்பு செலுத்துகிறோம். புல்லும், நுண்ணுயிரும் ஒரே படைப்பின் வேறு உருவங்கள் என்று உணரும்போது நமது மனோபாவமே மாறு கிறது. எதிலும் ஒரு சகிப்புத் தன்மை, அன்பு நம்மிடை பரவுகிறது. பொங்கி வழிகிறது. செய்யும் வேலையில் உயர்வு தாழ்வில்லை, அது ஓர் இயக்கம் என்று நமது பணிகளில் ஈடுபடுகிறோம். எதிரி என்று யாரும் இல்லை, இப்போது. அறியாதவர்கள் தான் இருக்கிறார்கள். அவர்களுக்கு அனுதாபம் காட்டு கிறோம்.

"பகைவனுக்கு அருள்வாய் நன்னெஞ்சே, பகை வனுக்கருள்வாய்...பகை நடுவினில் அன்புருவான நம் பரமன் வாழ்கிறான்" என்று பாரதியார் பாடும்போது பாரதியைச் சாதாரணக் கவிஞனாக நான் காண்ப தில்லை. சோதியில் சோதியாய் நிற்கும் ஞானியாய்,

குருவாய் நான் காண்கிறேன். "தின்னவரும் புலி; தன்னையும் அன்புடன் சிந்தையிற் போற்றிடுவாய்— நன்னெஞ்சே! அன்னை பராசக்தி அவ்வுருவாயினள்' அவளைக் கும்பிடுவாய்" என்று அவர் கைகூப்புகிறார்; மேல் நோக்குகிறார். நாமும் கைகூப்புகிறோம். மேல் நோக்குகிறோம்.

நம்மிடம் எழும் ஓர் ஐக்கிய உணர்வினை அறிந்து கொள்ளவும், வளர்க்கவும், நாம் அன்றாட வாழ்வில் உதவும் நினைவறிவுக்கு அப்பால் செல்ல வேண்டும். அதைத்தான் பெரியவர்கள் கூறினார்கள்.

டோயோ ஓர் இள மாணவன். தெரிந்து கொள்ள புத்த சங்கத்தில் சேர்ந்திருக்கிறான். பெரிய துறவி மோக்குராய் அவனுக்கு வழிகாட்டுவார் என்று எதிர் பார்த்து அங்குள்ள மணியை மெதுவாக அடித்து விட்டுத் தன் வணக்கத்தைத் தெரிவித்துவிட்டு அவர் முன் அமர்ந்தான். ஞானி கண் விழித்தார். "டோயோ! இரு கைகளையும் சேர்த்துக் கொட்டி சப்தம் எழுப்பு" என்றார். டோயோ அப்படியே செய்தான்.

"நல்லது இப்போது ஒரு கையினால் ஒலி எழுப்பு" என்றார் குரு. டோயோ மௌனமானான். முடிவில் வணக்கத்தைத் தெரிவித்துவிட்டு, அது பற்றிச் சிந்தித்துக் கொண்டே வெளியேறினான். மீண்டும் திரும்பி வந்தபோது ஒரு கையினால் சென்று மணியைத் தட்டி ஒலியை எழுப்பினான். "அது அல்ல" என்றார் ஞானி. மறுநாள் வந்தபோது ஒரு கையினால் இசைக் கருவியை மீட்டினான். "அல்ல" என்றார் குரு. அடுத்து வந்தபோது ஒரு கையினால் தண்ணீரைப் பாத்திரத்திலிருந்து கீழே கொட்டி ஒலி எழுப்பினான்.

"'ஹூம். இல்லை'' என்றார் அவர். டோயோ பல நாள் முயன்றான். முடிவில் அவரிடம் வருவதை நிறுத்தி விட்டான். ஓராண்டு காலம் எல்லாவற்றையும் தீவிரமாகச் சிந்தித்துப் பார்த்தான். பிறகு ஞானியிடம் வந்தான். வணங்கினான். ''குருவே! எனக்கு அந்த சப்தம் கேட்டது. அந்த சப்தமில்லாத சப்தத்தை, ஒரு கை உண்டாக்கும் சப்தத்தை நான் கேட்டேன்'' என்றான்.

# 7. பிரச்னைகளின் புகலிடம்



"இந்தப் பிரச்சினையிலிருந்து, இந்தக் கஷ்டத்திலிருந்து எப்படி மீளப் போகிறேன் என நீங்கள் திகைக்கக் கூடும். உங்கள் பிரச்னை—பணப் பிரச்னை, தொழில் பிரச்னை, மனித உறவுப் பிரச்னை—மனதில் பாரமாக உட்கார்ந்து அழுத்தக் கூடும். பிரச்னைகளைச் சமாளிக்க ஒரு வழி இருக்கிறது. நம்பிக்கை இழக்காதீர்கள். உங்களை அழுத்தும் கஷ்டங்களிலிருந்து வெளிவரவும், வாழ்வில் நீங்கள் விரும்புவதை அடையவும் ஒரு வழி இருக்கிறது..." என்ற வாக்கியங்கள் அப் புத்தகத்தைத் திறந்தவுடன் என் கண்களில் பட்டன. யாரோ நம்மை மனதில் கொண்டு, நமக்காக எழுதி இருப்பதுபோல் பட்டது. மேலே படித்தேன்: "நம்முள் இருக்கும் அந்த மகத்தான சக்தியை நாம் நமது பிரச்னைகளுடன் அணுகும்போது வழி பிறக்கிறது. மனத்திலிருந்து பாரத்தை இறக்கி விடுகிறோம், அவன் பொறுப்பு என்று விட்டு விடுகிறோம். மனம் லேசாகிறது. நாம் வழக்கம் போல அலுவல்களைக் கவனித்துக் கொண்டிருக்கும்போது நமது பிரச்னைகளுக்கு வழி பிறக்கிறது. பிரச்னைகள்

தீர்கின்றன.'' எனது மனபாரம் குறைந்தது. உலகில பிரச்னைகளிலிருந்து விடுபட இது ஓர் இயல்பான முறை—இப்படித்தான் இயற்கை செயல்படுகிறது—என்பதை உணர்ந்தேன்.

மன நூலாரும் அதையேதான் கூறுகிறார்கள். விஞ்ஞானிகளின் வாழ்க்கைச் சம்பவங்களும் குறிப்புக் களும் இதையேதான் காட்டுகின்றன.

ஒரு பிரச்னை, சிக்கல், கஷ்டம் என்று வரும்போது அதுபற்றித் தீவிரமாகப் பல கோணங்களிலிருந்து ஆராயவேண்டுமெனவும், 'இதற்கு ஒரு முடிவு காண வேண்டும்' என்ற தணியா வேகம் அடி மனதில் ஓட வேண்டுமெனவும், பின், நாம் அதைப்பற்றி மறந்து விடவேண்டுமென்றும், நமது ஆழ்மனம் சில நாளில் பிரச்னைகளுக்கு வழி காண்கிறது என்றும் கூறு கிறார்கள்.

இதையே மதங்கள் 'பிரார்த்தனை செய்யுங்கள்' என்றும், அவனிடம் பாரத்தைப் போடுங்கள் என்றும், வழி பிறக்கும் என்றும் கூறுகின்றன. ஒரு பிரச்னை யைப் பற்றிக் கவலைப் பட்டவுடன் அதை மறக்க வேண்டும். மறந்தபோது நமது எண்ண சக்தி விடுபட்டுக் காரியம் செய்ய வெளியே போவதில்லை. வெளியே சென்று தன் சக்தியைச் செயலாக்க முடிவதில்லை. அடிக்கடி அதையே எண்ணி ஊடாடிக் கொண்டிருக்கும்போது நமது எண்ண சக்தியை நாமே நசிக்கச் செய்கிறோம்.

விஞ்ஞானி தாமஸ் எடிசன், மின்சாரப் பிரச்னைகள் வரும்போது உடனே சற்று நேரம் 'பூனைத் தூக்கம்' போடுவாராம்.

மூச்சு விடும் காற்று மூலமும், வெப்ப மூலமும், ஒளி மூலமும் நாம் புற உலகுடன் தொடர்பு கொண்டிருக்கிறோம். அந்தப் புற சூழ்நிலைக்கு ஏற்ப நம் உடல் இயங்குகிறது. அதுபோல புலனாகாத ஒரு சக்தியுடன், நமது மனத்தின் மூலம் தொடர்பு கொண்டிருக்கிறோம். அதை உணரும்போது நம் வாழ்க்கை இனிமையாகிறது. அந்தச் சக்தியை நம் தேவைக்கு ஏற்ப உபயோகித்துக் கொள்ள முடிகிறது.

அலெக்சிகாரல் என்ற பிரபல மருத்துவ விஞ்ஞானி எழுதுகிறார்: "ஒரு பாசத்தினாலும், ஆழ்ந்த நம்பிக்கையாலும், மனிதன் இவ்வுலகின் அடிப்படைப் பொருளுடன் தொடர்பு கொள்ள முடியும். அப்போது மனிதன் காரண காரியமாக எதையும் சிந்திப்பதில்லை. பிரார்த்தனையை உபயோகிக்கிறான்."

தாமஸ் எடிசனின் நண்பரான பிரபல மேஜிக் நிபுணர் டுனிங்கர் கூறுகிறார்: "புதியன கண்டு பிடிக்கும் விஞ்ஞானிகள் பிரச்னைகளின் முடிவுகளைச் சில உணர்வுகளாக வெளியிலிருந்து பெறுகிறார்கள்." என்ன வெளி அது?

எடிசனுக்கும் மற்ற விஞ்ஞானிகளுக்கும் மட்டுமல்ல இந்த அறிவின் தேவை; நமக்கும் தேவைப் படுகிறது.

நாம் எப்படி அன்றாட வாழ்வு வாழ்கிறோம், தினம் எப்படிப் பல்வேறு பிரச்னைகள் நம்மை மோதுகின்றன என்பதையும், எப்படி நம்மைச் சூழ்ந்திருக்கும் பிரபஞ்ச அறிவு—பரம்பொருள்—நமக்கு உதவமுடியும், அதற்கு நாம் என்ன செய்ய வேண்டும் என்பதை

விளக்க எண்ணும்போது மீண்டும் ஓர் அழகிய 'ஜென்' கதைதான் என் நினைவுக்கு வருகிறது.

கியோட்டோ நகரில் இரண்டு தியான புத்தரின் மடங்கள் இருந்தன. அவ்விரண்டிலும் துடிப்பான இரண்டு இளைஞர்கள் மாணவர்களாக இருந்தனர். வடக்கு மடம் தனது மாணவனைக் கறிகாய் வாங்க சந்தைக்குத் தினமும் அனுப்பியது. வழியில் அவன் தெற்கு மடத்தைச் சேர்ந்த மாணவனைச் சந்தித்தான்.

வடக்கு மடத்து மாணவனைப் பார்த்து, "எங்கே போகிறாய்?" என்று கேட்டான் தெற்கு மடத்து மாணவன். "என் கால் எங்கே என்னை இழுத்துக் கொண்டு போகுமோ அங்கே" என்றான் வடக்குக் காரன். தெற்குக்காரன் ஒன்றும் பதில் பேசவில்லை; மௌனமானான். மடத்திற்குச் சென்று நடந்ததைக் கூறினான். மடத்துத் தலைவர் கூறினார்: "நாளை சந்திக்கும்போது நீ அதே கேள்வியைக் கேள். 'கால் போன இடத்திற்கு' என்று அவன் பதில் சொல்லும் போது, 'காலில்லாவிட்டால் எங்கு போவாய்?' என்று கேள்" என்றார்.

மறுநாள் மாணவர்கள் சந்தித்தார்கள். "எங்கே போகிறாய்?" என்றான் தெற்கத்தியான்.

"காற்று அடித்துச் செல்லுமிடத்திற்கு" என்று வந்தது பதில். தெற்கு மடத்து மாணவன் மீண்டும் மௌனமானான். இது அவன் எதிர்பார்த்த பதிலல்ல.

திரும்பிப் போய் மடத்துத் தலைவரிடம் நடந்ததைக் கூறினான். தலைவர் கூறினார்: "நாளைக்குக் கேள். காற்றில்லாவிட்டால் எங்கே போவாய்? என்று."

மறுநாள் மீண்டும் மாணவர்கள் சந்தித்தார்கள். "எங்கே போகிறாய்?" என்று கேட்டான் தெற்குப் பகுதி மாணவன். "கறிகாய் வாங்குவதற்கு" என்று வந்தது பதில்!

இந்த 'சென்' புத்த கதையைப் பலமுறை படித்துப் பார்த்துவிட்டு அதன் தாத்பரியத்தைச் சிந்திக்குமாறு, ஒரு முடிவுக்கு வருமாறு, இதை வாசகர்களிடம் விட்டு விடுகிறேன்.

பலர் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள், யோகம் தியானம், ஆண்டவன், பரம்பொருள் என்னும் போது சன்னியாசத்தை வாங்கிக் கொண்டு எல்லாவற்றையும் அவன்மேல் போட்டுவிட்டு வாழ்க்கையிலிருந்து தப்பி விடலாம் என்று. சன்னியாசம் வாங்காமலேயே, சிலர் இந்த மனோபாவத்தின் மூலம் காவி 'சூட்டி'ல் வாழ்க்கையைக் கழிக்க முயல்கின்றனர்; அவர்கள் அறியாதவர்கள்! வாழ்க்கை என்பது ஓர் இயக்கம். அந்த இயக்கத்தில் நம் பகுதியைத் தட்டிக் கழிப்பதன் மூலம் யாரும் எங்கும் போக முடியாது. தங்களை ஏமாற்றிக் கொள்ளலாம். ஊரையும் ஏமாற்றலாம், ஆனால் வாழ்வின் பயனை இழந்தவர்களாவோம்.

பகவத்கீதை திரும்பத் திரும்பச் சொல்லும் ஒரு விஷயம்: 'செயல்' என்பதாகும். கர்மம், தொண்டு, பணி, இயக்கம், செயல்.

நாம் வாழும் இவ்வுலகம், அந்த இயக்கத்தை உணர்ந்து அத்துடன் ஒத்து இயங்கும்போதுதான் வாழ்க்கை பயன் பெறுகிறது. செயலில்லாது பயன்

இல்லை. இவ்வுலகில், இப்பிரபஞ்சம் சதா செயல்பட்டுக் கொண்டிருக்கிறது — நினைவில் கொள்ளுங்கள். அத்தகைய செயல் நிறைந்த, சக்தி நிறைந்த அறிவுரைகளை நமது பொக்கிஷங்களாகப் பெற்றிருந்தும், நாம் அதை உணரவில்லை. இந்திய வாழ்க்கை ஏதோ நடைமுறை உலகிலிருந்து தப்பிக்க முயலும் வாழ்க்கையென, சோம்பேறி வாழ்க்கையாகப் பயந்தவர்களின் வாழ்க்கையாக மாறிவிட்டது.

வாழ்க்கை எவ்வளவு உண்மையோ, அவ்வளவு உண்மை வாழ்க்கைப் பிரச்சனைகளும். பிரச்சனைகளில்லாத வாழ்வு ஞானிகளுக்கும் இல்லை. ஏற்றத்தாழ்வில்லாத இரவு பகலற்ற, கஷ்ட நஷ்டங்களற்ற ஒரு வாழ்வு வெறும் கற்பனையே. வாழ்வில் வரும், துன்பங்கள், துயரங்கள், கஷ்டங்கள் ஒரு பிரச்னை அல்ல. அதை எப்படி அணுகுகிறோம், சமாளிக்கிறோம், அதை மேக்கரித்து மீளுகிறோம் என்பதில்தான் எல்லாம் அடங்கியிருக்கிறது.

நமது வாழ்க்கை நம்பிக்கை நிறைந்த வாழ்க்கையாகட்டும். நமது வாழ்க்கை செயல் நிறைந்த வாழ்க்கையாகட்டும்.

# 8. காரண காரியத்துக்கு அப்பால்...

உலகெங்கிலும் மனிதன் பிறந்ததிலிருந்து எழுப்பிய கேள்வி: ஏன் இந்தத் தூக்கம்? ஏன் இந்தச் சிக்கல்கள்? நான் ஏன் பிறந்தேன்? இந்த உலக அமைப்பின்—பிரபஞ்ச அமைப்பின் சூட்சமம்தான் என்ன?

அதன் விளைவாகப் பல நாட்டு மக்களும் ஒருவருக்கொருவர் தொடர்பு இல்லாமல், அவர்களுக்குத் தோன்றிய வழிகளில், அவர்கள் அனுபவம் காட்டிய பாதையில் அறிவை வளர்த்தார்கள். இந்தியாவில் தியான மார்க்கம் தோன்றியது. ஜப்பானில் தியானம் வழியே பிறந்த சென் மார்க்கம் — புதிரை விடுவிக்கும் சுய சிந்தனை—தோன்றியது. அரேபியாவில் சூபிகள் எனப் படுவோர் இசையின் மூலமும் நாட்டியங்களின் மூலமும் உணர்வு மூலமுமாக (பக்திப் பாதை) தங்களை எங்கோ இருக்கும் அகண்ட பரம்பொருளுடன் பிணைத்துக் கொண்டனர்.

இவ்வழிகள் அமைதியையும், நெறியையும், மகிழ்வையும், மகாசக்தியின் வலிமையைப் பெற்ற துணிவையும், நம்பிக்கையையும் தந்தன. இதனால் வாழ்க்கை வாழ்வது எளிதாயிற்று. இந்தப் பழைய மார்க்கங்களை நோக்கி இன்றைய மனோதத்துவ ஆராய்ச்சிகள் பல பல்கலைக் கழகங்களில் நடைபெறுகின்றன. அறிஞர்கள், ஏதோ புதையலைக் கண்டெடுத்-

தாற்போல மகிழ்கிறார்கள். மாணவர்களும் இளைஞர் கூட்டமும் புதிய அனுபவங்களில் ஈடுபடுகின்றனர்.

இது அனுபவ அறிவு. விஞ்ஞானமோ ஆதாரங்களை மேற்கொண்ட அறிவு. விஞ்ஞானத்தில் விஞ்ஞானி தான் வெளியே இருந்து கொண்டு சோதனைகளைச் செய்து உண்மை காண்கிறான். இந்த அனுபவ அறிவிலோ விஞ்ஞானி, தானே ஒரு சோதனைப் பொருளாக மாறி சோதனைகளைத் தன்மீதே ஏற்றிக் கொள்கிறான். இதையே அனுபவம் என்கிறோம். ஆதாரத்தை மட்டுமே நம்பி உண்மை காண்பது போதாது. அனுபவத்திற்கும் உண்மை காணும் பணியில் மகத்தான பங்கிருக்கிறது என்று அறிஞர்கள் அபிப்பிராயப் படுகின்றனர்.

சென் மார்க்கத்தில் புத்தபிக்குகளின் 'விதண்டா விவாத'க் கதைகள் வந்தது போல, சூபிகள் மார்க்கத்தில் நம்மைச் சிந்திக்க வைக்கும் நகைச்சுவைக் கதைகள் வருகின்றன. முல்லா நசிருத்தீனின் நகைச்சுவைக் கதைகளையும் செயல்களையும் படித்திருப்பீர்கள். அக் கதைகள் சூபிகளின் நோக்கை விளக்குகிறது.

இதுவல்லாமல் சில சடங்குகளை, சூபிகள் அனுசரிக்கிறார்கள். பனிரெண்டு பேர் கொண்ட இரு கூட்டங்கள் இரண்டு வரிசையில் நின்றுகொண்டு பாடுகின்றனர், ஆடுகின்றனர். சிந்திக்கும் திறனுக்கு அப்பால் செல்ல சில பாடல்களை, ஒலிகளைத் திரும்பத் திரும்ப எழுப்புகிறார்கள்.

திருமதி எம். எஸ். தம்மை மறந்து பாடுகிறார். மதுரை சோமு நம்மை எல்லாம் எங்கோ அழைத்துச்

செல்கிறார். எங்கு அழைத்துச் செல்கிறார்கள்? கேட்டால், 'நாதப் பிரம்மம்' என்பார்கள். நாதத்தின் இசையின், ஒலியின் பிறப்பிடத்திற்கே போகிறோம். அங்கே நமது இசைக் கலைஞர்கள் ஐக்கியமாகிறார்கள். நாமும் அங்கே ஐக்கியமாகிறோம். அற்புதமான அனுபவம்.

அதேபோன்ற அனுபவம்தான் பல துறைகளிலும் ஏற்படுகிறது; எல்லாம் ஒருவகை ஐக்கியத்திலே முடிகின்றன; அல்லது ஐக்கிய நிலையைத் தொட்டுவிட்டு வருகின்றன.

இதைத்தான் சூபிகளின் சடங்குகள் காட்டுகின்றன. அங்கே மகிழ்வு, ஆரவாரம் கண்ணீர் என்று எல்லா அடிப்படை உணர்வுகளும் வெளிப்படுகின்றன. மனிதன் ஏன் சடங்குகளைச் செய்கிறான் என்று நான் பலமுறை யோசிப்பதுண்டு. ஹார்டுவர்டு பேராசிரியர் ஹூஸ்டன் ஸ்மித் தனது 'மனிதனின் மதங்கள்' (Religions of man) என்ற புத்தகத்தில் அதற்கான காரணங்களை ஆராய்கிறார்.

சடங்குகளில் ஓர் ஒழுங்கு இருக்கிறது. ஒரு நியதி இருக்கிறது. ஏதோ செய்ய வேண்டியதைச் செய்கிறோம் என்ற பாதுகாப்புணர்ச்சி, நம்பிக்கை இருக்கிறது. மேலும் சட்டென்று காரண காரிய அறிவு மூலம் ஒரு விஷயத்தில் மனத்தை ஈடுபடுத்துவது எல்லாராலும் முடியாது. பல செயல்கள் மூலம் பல சடங்குகள் மூலம் நம்மை நாமே நம்ப வைக்கிறோம். சடங்குகள் நம்பிக்கை தரும் ஒரு பாதை. சடங்குகளில் விஷயங்களை உருவகப்படுத்துகிறோம்; பாவனை செய்கிறோம். பாவனை செய்வது நிஜமாகச் செய்வதன் முன்படி. மனத்தை நம்ப வைக்கும் முதற்படி.

சூபிகளின் இந்த ஐக்கிய உணர்வுகளுடன் நசிருத்தீனின் நகைச்சுவைக் கதைகளையும் சேர்த்துப் பார்க்கும்போது அவர்களது வாழ்க்கைத் தத்துவத்தின் முழுமை நமக்குத் தெரியும்.

முல்லா நசிருத்தீன் எதையோ தொலைத்துவிட்டுத் தரையில் தேடிக்கொண்டிருந்தார். "என்ன தொலைத்து விட்டீர்கள் முல்லா?" என்று வழியில் போனவர் கேட்டார். "எனது சாவி" என்றார் முல்லா. வழியில் போனவரும் மண்டி போட்டுக் கொண்டு முல்லாவுடன் சாவியைத் தேடத் துவங்கினார். சிறிது நேரம் கழித்து அடுத்தவர் முல்லாவைப் பார்த்துக் கேட்டார். "எந்த இடத்தில் சாவி தொலைந்தது என்று ஞாபகமிருக்கிறதா?"

"ஏன், என் வீட்டில்தான்."

"சாவியை அங்கே தொலைத்துவிட்டு இங்கே தேடுகிறீர்களே?"

"இங்குதான் என் வீட்டைவிட அதிக வெளிச்சம் இருக்கிறது...அதனால்தான்" என்றார் முல்லா.

வெளிச்சம் இருக்குமிடத்தில்தான் தேட முடியும் என்கிறார் முல்லா. எதை நமக்குச் சொல்கிறார் அவர்.

முல்லா நசிருத்தீனை எல்லா கீழை நாட்டுத் தத்துவங்களையும் அறிந்து வருமாறு அனுப்பினார் அரசர். முல்லா எல்லா நாடுகளையும் பார்த்துவிட்டு ஊர் திரும்பினார். அரசரிடம் போய் நின்று ஒரே ஒரு வார்த்தையைப் பதிலாகக் கூறினார்: 'கேரட்" என்று. அரசர் விளக்கிக் கூறுமாறு சொல்லவே,

முல்லா கூறினார்: "முக்கியமான பகுதி கீழே மறைத்து வைக்கப்பட்டிருக்கிறது. சிலருக்குத்தான் தெரியும் கறி காய்த் தோட்டம் பயிர் செய்யும் தோட்டக்காரனைப் போல. மேலே பச்சையாயிருக்கும், கீழே ஆரஞ்சு நிற மிருக்கும், என்று. அதை அடைய—எடுக்க—முயற் சிக்காவிட்டால் அழுகிப் போகும். பல கழுதைகள் அதைத் தின்னச் சுற்றிக் கொண்டிருக்கின்றன."

"**வி**தி என்பது என்ன?" என்று ஓர் அறிஞர் முல்லாவைப் பார்த்துக் கேட்டார்.

"முடிவில்லாத சம்பவங்கள்; பின்னிப் பிணைந்து ஒன்றையொன்று பாதிப்பதுதான்" என்றார் முல்லா.

"அது சரியல்ல. நான் காரணத்திலும் அதன் விளைவிலும்—காரண காரிய தத்துவத்தை—நம்பு கிறேன்" என்றார் அறிஞர்.

"ரொம்ப சரி" என்றார் முல்லா. தெருவில் ஒரு கூட்டம் போய்க் கொண்டிருந்தது. "அந்த மனிதனை தூக்கு மேடைக்கு அழைத்துச் செல்கிறார்கள். அவன் ஏன் செல்கிறான்? யாரோ காசு கொடுத்த காரணத்தி னால், அவன் கத்தி வாங்கவும் மற்றவனைக் கொல்ல வும் நேர்ந்ததா? அல்லது அவன் கொலை செய்ததைப் பிறர் பார்க்கநேரிட்டதால் தூக்குமேடை செல்கிறானா? அல்லது அவன் கொலை செய்தபோது யாரும் தடுக்காத காரணத்தினாலோ?" என்றார் முல்லா அறிஞரை நோக்கி. நமது காரண காரியம் காட்டும் அறிவுக்கு எல்லையுண்டு. இதை நாம் உணர வேண்டும்.

காரண காரியத்திற்கு மேலே ஒரு பெருஞ் சக்தி இருக்கிறது. "பற்றுக பற்றற்றான் பற்றினை" என்று அதையே அறிவுரை வழங்குகிறார் அழகாக வள்ளுவர்.

# 9. வெறும் அறிவின் விளைவுகள்



மேனாட்டு விஞ்ஞானிகளான ஐன்ஸ்டன், ஒப்பன் ஹீமர், ஏ. ஏ. காக்ரன், ஷ்ரோடிஞ்சர் என்ற பலரும் பௌதிகத்தின் எல்லையில் நின்று அறிவு விளக்கம்—தரும்போது அது படிக்கப் படிக்க இனிக்கிறது, மகிழ்ச்சியூட்டுகிறது, ஒரு நிறைவையும் திருப்தியையும் தருகிறது. அவர்கள் கூறுவனவற்றைத் தமிழ் மக்களுக்கும் கூறுவோம் என்று எழுதத் துவங்கும் போது எனக்குத் தயக்கம் ஏற்படுகிறது. "எனது கருத்துக்கள் என்னுடனேயே இருந்துவிட்டுப் போகட்டும், அவர்கள் கூறி நான் ஏற்றுக் கொள்பவை யும் என்னுடனேயே இருந்துவிட்டுப் போகட்டும்" என்ற எண்ணங்கள் என்னுள் மேவுகின்றன.

காரணம், நான் வளர்ந்த பகுத்தறிவு வாதச் சூழ்நிலை; அது ஒரு யுகம். மறுமலர்ச்சி யுகம். பெரியாரும், அண்ணாவும், பாரதிதாசனும், ராதாவும் பல துறைகளில் ஆழ்ந்து போயிருந்த—தன்னம்பிக்கை யற்றிருந்த — ஒரு சமுதாயத்திற்கு ஒளியூட்டினர். பகுத்தறிவு, தர்க்கவாதம், ஏன் என்று கேட்கும்

துணிவு, பழமையை உடைத்தெறிந்துவிட்டு வெளி வரும் தீரம் எங்கும் கொப்புளித்தது.

ஏனெனில், சரித்திரம் காணாத அளவுக்குக் குறிப் பாகத் தமிழ்மகன், தன்னைப் பற்றிய உணர்வில் தாழ்ந்து போய்விட்டான். இது சாதியினால் ஏற்பட்ட விளைவு என்பதை மக்கள் உணர்ந்தார்கள். ஐம்ப தாண்டுகளுக்குமுன் நமக்கு விஞ்ஞான அறிவு இல்லை. விதியும், சாதியும், மூட நம்பிக்கைகளும் மனிதனின் அன்றாட வாழ்வைப் பாதித்து முடக்கிவிட்டிருந்தன. இதை எதிர்த்துப் புரட்சியாகப் பகுத்தறிவு இயக்கம் தோன்றியது. தர்க்கவாத அறிவு வளர்ந்தது. மேடைப் பேச்சு கலையாக வளர்ந்தது. பழமையை அது எதுவாயிருந்தாலும் — நல்லதோ, கெடுதலோ அதைத் தாக்கித் தகர்த்தெறியும் மனோபாவம் தோன்றியது.

முன்பு ஒரு கொடுமை; அறியாமையின் கோடியில் வாழ்ந்த கொடுமை. மறுமலர்ச்சியின் விளைவாக நாம் மற்றொரு கோடிக்குப் போய்விட்டோமோ என்று நான் யோசிப்பதுண்டு; சந்தேகப்படுவதும் உண்டு.

இதன் விளைவாகப் பார்க்கலாம். தர்க்கவாத அறிவு நமக்கு ஒரு தன்மானத்தைக் கொடுத்தது. நம்பிக்கையைக் கொடுத்தது. சமமாக உலவி, பேச நடக்க நமக்குத் தைரியத்தைக் கொடுத்தது. இதன் விளைவாகப் பழமையிலுள்ள பரம்பரை பரம்பரையாக வந்த பழக்க வழக்கங்கள் அனைத்தையுமே நாம் தூக்கி எறிந்துவிடத் தயாராய் இருந்தோம். வயதேற ஏற அனுபவம் பெறப் பெற நமது தலைவர்களிடையேயும் முன்னோடிகளிடையேயும் இலைமறை காயாய் குழப்

பங்கள் தோன்றின. இதைத் தெளிவுபடுத்த அண்ணா 'ஒன்றே குலம், ஒருவனே தேவன்' என்றார். யோகிகள், சாமியார்கள் என்ற போர்வையில் உலவிய திருடர் களை அண்ணா சாடினாரே தவிர, தியான மார்க் கத்தை ஆண்டவனுடன் ஐக்கியப்பட்டு ஒருமுகப்பட்டு உணர்வு பெறும் நிலையை அவர் ஒருகாலும் ஒறுக்க வில்லை. ஆனால் பாமர மக்களிடமோ, அவர்களுக்கு ஒருபடி மேலே நின்று அவர்களை அழைத்துச் செல்வ தாகக் கூறிக்கொண்டே தொண்டர்களிடமோ போலிச் சாமியார்களுக்கும் தியான மார்க்கத்திற்குமான வேறு பாடு புலப்படவில்லை. அப்படி வேறுபாட்டை உணர்வது, உணர்த்துவது, தங்களைத் தாங்களே மறுத்துக்கொள்வது போல அவர்களுக்குப் பட்டது. தங்கள் முந்திய கருத்துக்களுக்கு மாறுபட்டுப் பேசுவது போலப் பட்டது.

மதச் சடங்குகளை விவரம் புரியாது ஏற்றுக் கொண்டோம் முன்பு. அதிலிருந்து விடுபட அவன் அடிப்படைகள்கூட தேவையில்லை என்ற ஒரு மறு கோடிக்குப் போய்விட்ட நிலை பின்பு.

நாம் எதனையும் காய்தல் உவத்தலின்றி வள்ளுவன் கூறுவது போல் பார்க்க வேண்டும்; பார்க்கக் கற்றுக் கொள்ள வேண்டும். அப்போதுதான் அதிகப் பயன் பெற முடியும். அப்பன் வெட்டிய கிணறு என்று மூடத்தனமாக உப்புத் தண்ணீரைக் குடிப்பதோ, மாற்றான் வீட்டு மல்லிகை இது, இதற்கு மணம் கிடை யாது என்று பிடிவாதமாக மறுக்கும் பழக்கமோ வாழ்க்கைக்குப் பயன் தராது.

இன்று நாம் அறிவு பெற்ற நிலையில், அனுபவம் பெற்ற நிலையில், ஆங்கிலம் என்ற ஜன்னல் வழியே

வெளி நடப்பைப் பார்க்கும் ஒரு காலத்தில் வசிக்கிறோம். பொருள்களை அதனதன் சரியான இடத்தில் வைக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். இதில் உபதேசத்திற்கு இடமில்லை. சொந்த அனுபவமும், நமது பரந்த அறிவும்தான் நமக்கு உதவக்கூடும்; துணை புரியக் கூடும்.

இனி, தர்க்கவாத அறிவின் விளைவுகளைக் கவனிப்போம். தர்க்கவாதத்தின்போது நம்மை நாமே புத்திசாலியாகக் காணும் ஒரு பெருமை தோன்றுகிறது. தர்க்கவாதத்தின் மூலம் எல்லாவற்றிற்கும் ஒரு காரணம் சொல்ல முற்படுகிறோம். அது உண்மையா பொய்யா என்பதில் உள்ள அக்கறையைவிட நமது வாதத் திறமையின் வலிமை, நமக்கு அதிகக் கவர்ச்சி ஊட்டுகிறது. ஒரு செயலின் நியாய அநியாயங்களை விட, அநியாயத்தையும் நியாயம்போல் நாம் வாதத் திறமையால் சோடிக்கும்போது அது நமது சாதனையாகிறது. நம்மைப் பார்த்து நாமே பெருமைப்படுகிறோம். போகப் போக நியாய அநியாயங்கள், உண்மை பொய்கள், செய்யக்கூடியவை கூடாதவை, என்பதெல்லாம் பின்னுக்குத் தள்ளப்படுகின்றன. அதாவது தர்க்கவாத அறிவு நாம் தவறு செய்வதற்கு நமக்கு அநுசரணையாக உதவுகிறது. திருடலாமா கூடாதா என்பதிலிருந்து திருடுவது எப்படித் தவறாகும் என்று தர்க்கவாத மனிதன் தனக்குள் வாதித்து சமாதானமடைகிறான். "பிறர் பார்த்துக்கொண்டு இல்லையே, திருடினால் என்ன?" என்ற வாதம் மனத்தில் தலை தூக்குகிறது.

"சட்டமும் நானே, சட்ட நுணுக்கமும் நானே. நீதியே என் கையில் இருக்கும்போது திருடுவது

தவறென்று யார் கூறிவிட முடியும்?" என்று அடுத் தடுத்த படிகளுக்குச் சென்று மனிதன் தவறு செய்யும் மன உரம் பெறுகிறான்.

தர்க்கவாத அறிவை மட்டுமே நம்புபவன் நியாயங் களுக்கு அப்பால் நடப்பது இதனால் எளிதாகிறது. வெறும் தர்க்கவாதத்திற்கு அப்பால், வெறும் சட்டங் களுக்குப் பின்னால் நியாயம் என்ற மாறா உண்மை இருக்கிறது என்பதை மனிதன் மறக்கிறான்; உதா சீனம் செய்கிறான். இதனால் மனிதனின் குணநலன் களில் மாசு ஏற்படுகிறது.

'கேரக்டர்' இல்லாத வெறும் அறிவு, அதிகாரம், பதவி என்ற இரண்டின் துணைக்கொண்டு எந்த நிலைக்குப் போகும் என்பதற்கு நேற்றைய அமெரிக்க அரசியல் வாழ்க்கை ஓர் எடுத்துக்காட்டு. நிக்சன் ஓர் எடுத்துக்காட்டு. வெறும் தர்க்கவாத அறிவை மட்டும் நம்புவது நல்லதல்ல. தர்க்கவாதத்திற்குப் பின்னால் 'மனசாட்சி' இருக்கிறது. மனசாட்சியை மறப்பவர் களுக்கு "மாறா உண்மை நியாயம்" என்ற ஒன்று இருக்கிறது என்பதை அந்த உண்மையே அடிக்கடி புலப்படுத்திக் கொண்டிருக்கிறது.

ஆகவேதான் சொன்னார்கள், பற்று அற்று இருங்கள் என. 'புகழிலிருந்து பற்று அற்று நில்லுங்கள். அதிகாரத்திலிருந்து பற்று அற்று தன்னைத் தனியே பிரித்துக் கொண்டு பாருங்கள். பதவியிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு சாதாரண சாமான்யனின் நோக்கைக் கொள்ளுங்கள்?' என நம்மிலிருந்து நம்மை விடுவித்துத் தூர நின்று நம்

வாழ்க்கையைப் பார்க்கும் ஒரு நிலையின், தியானம் தருகிறது. அதனால்தான் ஓர் அரசியல் ஞானி தன் கண்படும் இடத்தில் தன் மயான அடக்க இடத்தை அமைத்துக் கொண்டாராம்.

நமது பழம்பெரும் தத்துவங்கள் வாழ்க்கையின் சாகா உண்மைகளிலிருந்து—நிரந்தர உண்மைகளி லிருந்து பிறந்தவை. சும்மா பழைய சோறு என்று தள்ளிவிடுவதற்குப் பதில், அந்த 'நீராகாரம்' அருந்திக் காலையில் நாம் புத்துணர்ச்சி பெறுவது நல்லது.

# 10. நமது தொடர்புகளின் பிடி



விஞ்ஞானம் பல விஷயங்களைப் பல நாள் சந்தேகத்துடன் நோக்கி வந்தது. மனிதன் ஒரு காலத்தில் நோய் தீர்க்க மூலிகைகளை உபயோகித்து வந்தான். பின்னால் ஒருநாள், "மூலிகையெல்லாம் சுத்தப் பழங்கால முறை" என்று தள்ளிவிட்டு அறிவு பூர்வமாக ஆராய்ந்து புதிய புதிய மருந்துகளை மனிதனே சிருஷ்டிக்கத் துவங்கினான். ஆராய ஆராய பழைய மூலிகைகளிலும் விஷயமிருக்கிறது என்ற முடிவுக்கு வந்தான்.

அதேபோல் ஒருவர் நினைப்பதைத் தூரத்திலிருக்கும் இன்னொருவர் அப்படியே கண்டு சொல்வது (Telepathy), பிற விஷயங்களை அறிவுக்கப்பால் சென்று அறிந்து கூறுவது (Clairvoyance), பொருள்களை மனோசக்தியால் நகரச்செய்வது (Psycho Kinesis), பின்னால் நடக்கப் போவதை அறிந்து சொல்வது (Precognition), மனக்கட்டுப்பாட்டின் மூலம் 'தானே இயங்கும் உறுப்பு'க்களை மனித கட்டுப்பாட்டுக்குள்

இயங்கச் செய்வது (Bio feed back) போன்ற பலவும் இத்தனை நாள் விஞ்ஞானிகளால், அறிஞர்களால் ஏதோ ஏமாற்றுக்காரர்களின் வேலை என்று கருதப் பட்டு வந்தது.

டியூக் பல்கலைக் கழகத்து மனோ தத்துவப் பேராசிரியர் ஜே. பி. ரைன் பல ஆதாரப்பூர்வமான சோதனைகள் மூலம் இவற்றில் உண்மை இருக்கிறது என்பதை நிரூபித்தார். அதன் விளைவாக அதீத மனம் (Para Psychology) ஆராயும் விஞ்ஞானிகளையும் அவர் சங்கத்தினையும் முதன் முறையாக இரண்டாண்டுகளுக்கு முன் அமெரிக்கா விஞ்ஞானக் கழகம் ஏற்றுக் கொண்டது.

எனினும், நாம் இன்று ஒரு பொழுது புலரும் தருணத்தில் இருக்கிறோம் என்றுதான் சொல்ல வேண்டும். விஞ்ஞானப்பூர்வமாக எதையும் நிச்சயித்துக் கூறும் நிலையில் மனம் பற்றிய இவ்விஞ்ஞானம் இன்னும் வளரவில்லை. ஆனாலும் எங்கும் ஒளிக் கதிர்கள் வேகமாகவும் சுரீரென்று உறைக்குமாறும் கிளம்பிக் கொண்டிருக்கின்றன.

‘‘மனிதன் வெறும் உடலல்ல. உடலுக்கப்பாலும் மனிதன் வாழ்கிறான். அப்போது மனிதன் எண்ண வடிவில், குணநலன்களின் வடிவில் வாழ்கிறான். அவன் இப் பிரபஞ்சத்தின் ஒரு பகுதி. இப்பிரபஞ்சமே அவனாகிறான்’’ என்ற அறிவு வளர வளர அதற்கான ஆதாரங்கள் வெளிவர வெளிவர, மனிதகுலம் எங்கே செல்லும்? மனித குலத்தின் நோக்கம் என்ன? பிரபல விஞ்ஞானியும் பிரெஞ்சு நாட்டுத் தத்துவ ஞானியுமான

டெபில் டி சார்தேன் கூறும் 'ஒன்று கூடிய தேவ நிலை'க்குச் செல்லும் மார்க்கமே, மனித வாழ்வின் லட்சியமாக அமையும். நமது அரவிந்தர் கூறிய மன வளர்ச்சி மூலம் அதிமனிதனாகும்-பரிணாம வளர்ச்சியே மனித குலத்தின் விதியாக அமையும் போலிருக்கிறது. அதுவே இயற்கையின் ஞான ஓட்டமாக இருக்கும் போலிருக்கிறது.

மனத்தைப்பற்றி அறிய மனம் ஒன்றுதான் கருவி. அது ஒன்றுதான் துணை. மனம் என்ன என்பதை மனம் மூலம்தான் சிந்திக்க முடியும். "அது என்ன? அது ஏன்? அது எப்படி?" என்பன போன்ற கேள்விகளை நமக்கு நாமே எழுப்பிக்கொள்ளும்போது, நமக்குக் கிடைக்கும் அறிவு நமது அனுபவமாகிறது. இந்த அனுபவ அறிவு ஆதார அறிவைவிட எதிர் காலத்தில் மிக முக்கியத்துவம் பெறப்போகிறது.

இவ்வளவு தூரம் பிரபஞ்ச அறிவைப் பற்றியும், பரம்பொருளைப் பற்றியும் எழுதும் காரணம் இதுதான். நம் மனத்தைப்பற்றி அறிந்துகொள்வதன் மூலம் அதைப் பண்படுத்துவதன் மூலம் இவ்வுலகில், ஓர் அற்புதமான நாம் விரும்பும் வாழ்க்கையை வாழலாம். நம் எதிர்காலத்தை நாம் அமைத்துக் கொள்ள முடியும். அதன் வழிமுறைகளைப் பின்னால் கவனிப்போம். அதற்கு முன்பாக நம் மனத்திற்கு இவ்வுலக வாழ்வுடன், உள்ள தொடர்புகளைப் போலவே, மறுபுறத்தில் எல்லாம் வல்ல சக்தியுடன், பிரபஞ்ச அறிவுடன் தொடர்பு உண்டு, தொடர்பு இருக்கிறது என்று அறிந்து கொள்வது நமது சக்தியையும் வலிமையையும் பல மடங்காக்கும்.

அது மட்டுமல்ல. அந்த அறிவு வாழ்க்கை வாழ் வாங்கு வாழ ஒரு நிதானத்தை அது தருகிறது. நம்மிட மிருந்து நம்மை அப்பாற்படுத்திக்கொண்டு பார்க்கும் ஒரு நல்ல மனத்தை அது ஏற்படுத்துகிறது.

அது மட்டுமல்ல. இவ்வுலக வாழ்க்கையின் பல விஷயங்கள் நாம் விரும்புகிற அளவுக்கு சில சமயம் நடப்பதில்லை. அதன் காரண காரியங்கள் நமது அறிவுக்கு அப்போது புலனாவதில்லை. அது போன்ற நெருக்கடிகளில், சோதனைக் காலங்களில் நாம் நம் மனத்திலிருந்து பாரத்தை நீக்குவதற்கு இப் பிரபஞ்ச அறிவிடம், பரம்பொருளிடம், விஷயங்களை விட்டு விடுவதற்கு ஈடான வழி வேறேதுமில்லை. அப்படி விடுவதன்மூலம் நமது ஆழ்மனம் விஷயங்களை எடுத் துக்கொண்டு, பிரச்னைகளுக்கு ஒரு முடிவு காண வசதி செய்கிறோம். "பல நேரம் சிந்தித்தேன். யோசித்தேன்; கவலைப்பட்டேன். பிறகு நடக்கிறபடி நடக்கட்டுமென்று விட்டுவிட்டேன். அதை மறந்து விட்டேன். பின் ஒரு சமயம் திடீரென்று வழி பிறந்தது" என்று விஞ்ஞானிகள் தங்கள் கண்டு பிடிப்புகளைப் பற்றிக் கூறும் அனுபவம் பிரபஞ்ச அறிவின் வலிமையைப் புலப்படுத்துகிறது.

ஆனால் நமது ஊரிலோ இத்தகைய எண்ணம் அதன் மறு கோடிக்குச் சென்று, "எல்லாம் அவன் செயல், என்னால் ஆவதொன்றுமில்லை" என்று செய லற்ற நிலைக்கு மனிதனைத் தள்ளிவிட்டது. நமது சிந்தனையும் செயலும்தான் நமது விதியை நிர்ணயிக் கின்றன; நமது எதிர்காலத்தை நிர்ணயிக்கின்றன; நமது இன்ப துன்பங்களை நிர்ணயிக்கின்றன. நம்மால்

செய்யக்கூடிய அளவுக்குச் செய்தபின், ஒன்றும் செய்ய இயலாதபோது பிரச்னையை 'அவ'னிடம் ஒப்புவிப்பது, நம் நினைவிலிருந்து அகற்றிவிடுவது நல்லது; பலன் தரும். அதுவல்லாமல் நாம் ஏதும் செய்யாமல் நம் பொறுப்பைத் தட்டிக் கழிப்பது, விதியின்மேல் பழியைப் போடுவது அறியாமை மட்டுமல்ல, நமது எதிர்காலத்தைப் பாழடிப்பதாகும்.

சிந்தித்துப் பார்க்குமிடத்து, இவ்வுலகில் உள்ள மனிதர்கள், உயிர்கள், பொருள்கள் அனைத்தும் ஒன்றை ஒன்று தழுவி, ஒன்றை நம்பி ஒன்று வாழும் ஒரு தொடர்பு நிலையில் இருப்பதை நாம் உணரக் கூடும். நமது எண்ணங்கள் நமது சூழ்நிலையைப் பாதிக்கின்றன. நமது சூழ்நிலையின் தன்மை நமது சிந்தனையையும் வாழ்வையும் பாதிக்கிறது; நமது சிந்தனையும் செயலும் நமது குடும்பத்தையும் நாட்டையும் பாதிக்கின்றது. ஒன்றை ஒன்று தாங்கிய நிலையில் உலகம் இயங்குகிறது.

ஒன்றை ஒன்று தழுவிய உலகம் எங்கே செல்கிறது? இரவுக்குப் பின் பகல் வருவதுபோல, முட்டை குஞ்சாவதும் பின் குஞ்சு பெரிதாகி முட்டையிடுவதுமாக உலகம் ஒரு வட்டத்தில் இயங்கி வருகிறது. நீண்ட இரவில் அமர்ந்திருக்கும் ஒருவனுக்குப் பொழுது புலர்வது ஒரு புதிய முன்னேற்றமாகத் தென்படுகிறது. அவனுக்கு வட்டம் தெரிவதில்லை. இவ்வுலகம் அனைத்தும் வந்த இடத்தை நோக்கிச் செல்லும் பெருவழியில் நடை போடுகிறது. நாம் மொத்தமாகப் பார்க்காது, நம் வாழ்வையும் அதன் அல்லல்களையும் இன்ப துன்பங்களையும் பார்க்கும்போது நமக்கு அந்தப் பெருந்தொடர்பு தெரிவதில்லை.

நமக்கு அந்தப் பெருந்தொடர்பு தெரியாதபோது, கடவுளாவது பிரபஞ்சமாவது என்று மனிதன் அங்கலாய்க்கிறான்.

நமக்கும் நமது சூழ்நிலைக்குமுள்ள தொடர்பை உணராதபோது மனித வளர்ச்சியில் தேக்கம் ஏற்படுகிறது. "நமது எண்ண நிழலே நமது சூழ்நிலை" என்று நாம் உணரும்போது நம் கையில் அத்தொடர்பின் பிடி அகப்படுகிறது. நமக்குள்ள தொடர்புகளின் பிடிப்புக்களை அறிவது அதைப் பயன்படுத்தி நல்வாழ்வு வாழ்வதற்கு முதற்படியாகும்.

# 11. ஒரு ஞானியும் ஒரு விஞ்ஞானியும்



"நம் மனத்தைப்பற்றி அறிந்துகொள்ளும் மன தத்துவ ஆராய்ச்சிகளே உலகில் நிலவும் மதங்களின் எதிர்காலமாகும்" என்று கூறுகிறார், ஒரு மனோ தத்துவப் பேராசிரியர். வாழும் வழியைப் போதிக் கின்றன மதங்கள். அத்துடன் நம்மை நாமே அறிந்து கொள்ளும் முயற்சியில் அவை நம்மை ஈர்க்கின்றன.

எனினும் மதம் ஒரு போதை, செயலற்றவனின் புகலிடம், சுயநம்பிக்கை இல்லாதவனின் ஊன்று கோல், மக்களைப் பயமுறுத்த மத போதகர்கள் உபயோகிக்கும் ஒரு சாதனம் என்று அதன் எதிரிகள் அன்றிலிருந்து இன்றுவரை கூறி வருகின்றனர். மேலும் நமது நாட்டில் மத போதனைகளினால் ஒரு தலைப்பட்ச வளர்ச்சி ஏற்பட்டு மக்கள் அதிகம் விதியை யும் குறைந்த அளவுக்கு மனித முயற்சியையும் நம்பத் தலைப்பட்டார்கள். அத்துடன் எல்லாத் துறை களிலும் அயோக்கியர்கள் இருப்பதுபோல, மதத் துறையில் சில போலிகள் புகுந்து, பொதுமக்களிடை ஓர் அவநம்பிக்கையைத் தோற்றுவித்துவிட்டனர். மத சம்பிரதாயங்களும் சடங்குகளும் மனிதனது சுதந்திர உணர்ச்சியைப் பறித்து சம்பிரதாயங்களுக்குட்பட்ட ஒரு வாழ்க்கையை அமைத்து விட்டன. வேண்டாத

வற்றைக் கெல்லி எறிய வேண்டிய மத சீர்திருத்த மானது, மதங்களின் அடிப்படைக் கோட்பாடுகளே பொய், ஏமாற்று வித்தை என்ற ஓர் எண்ணப் புரட்சியை விளைவித்தது. அதே சமயம் மேனாடுகளில் விஞ்ஞான அறிவு வேகமாக வளர்ந்தது. அம்மை நோய் ஒரு வைரசிலிருந்து கிளம்புகிறது. செயற்கையாக வானிலிருந்து மழை பெய்விக்கலாம், பறவைகளைப் போல் மனிதனும் பறக்கலாம் என்பன போன்ற விஞ்ஞான உண்மைகளின் தெளிவில் மனிதன் மதங் களைச் சந்தேகிக்கத் துவங்கினான். இதன் விளைவாக ஞானி, சோம்பேறி என்ற பட்டம் பெற்றார். அவர் இடத்தை விஞ்ஞானிகள் ஆட்சி புரியத் துவங்கினர். எதையும் ஆதாரத்துடன் நோக்கும்போது நமது தர்க்கவாத அறிவுக்குப் பெருமை ஏற்படுகிறது.

ஆனால் கடந்த பத்து ஆண்டுகளில் ஒரு மகத்தான மறுமலர்ச்சி புதிய நோக்கு ஏற்படத் துவங்கியது. விஞ்ஞானிகளின் சோதனைகளுக்கு யோகிகளும் ஞானி களும் உள்பட இசைந்தனர். அமெரிக்காவில் கான் சாசிலுள்ள மென்னிங்கர் இன்ஸ்டிடியூட்டில் ராமயோகி தமது இதயத்தையும், ரத்த ஓட்டத்தையும் மனக் கட்டுப்பாட்டால் நிறுத்திக் காட்டினார். தானே இயங்கும் தசைகள் என்று நாம் இத்தனை நாள் படித்து வந்த விஞ்ஞானம் நேர்தலைகீழாக 180 டிகிரியில் மாறியது. ஸ்டான் போர்டு பல்கலைக்கழகத்தில் புட் ஆப் என்ற பௌதிக விஞ்ஞானி (Remoteviewing) என்ற ஒரு சாதனையை விஞ்ஞான பூர்வமாகச் செய்து காட்டி யிருக்கிறார். அதாவது தொலைவிலுள்ள ஒருவர் இருக்குமிடத்தையும் செய்யும் செயலையும் வேறு இடத்திலுள்ள ஒருவர் படமாக வரைந்து காட்டுகிறார். நமது அலுவலகத்தில் என்ன நடக்கிறது, வீட்டில்

குழந்தை எப்படியிருக்கிறான், எதிர் நாட்டு ராணுவ முகாமின் தளவாட வலிமை என்ன, என்று பலவித விஷயங்களுக்கும் இது நாளை பயன்படக்கூடும். ஹார்வர்டு பல்கலைக் கழக மருத்துவர் பென்சன், நெருக்கடிகளில் வாழும் அமெரிக்க சமுதாயத்திற்கு, மருந்துகளும் மாத்திரைகளுமில்லாத மனக்கட்டுப் பாட்டு முறையை தியான முறையைச் சொல்லிக் கொடுத்து வருகிறார். மனம். மனம். மனம். எங்கும் மனம் பற்றிய ஆராய்ச்சி.

அதாவது விஞ்ஞானம் இப்போது வெகு தீவிர மாக ஞான மார்க்கத்தில் இறங்கியிருக்கிறது. உலகில் மிகப் பெரிய காரியம் நம்மை நாமே அறிந்து கொள்வ தாகும் என்று எல்லா தத்துவஞானிகளும் கூறியிருக் கிறார்கள். நம்மை நாமே அறிந்து கொள்ளும் முயற்சி யில் மனம் செயல்படும் விதங்களை, மனத்தின் இயல்பினை அறியும் முயற்சியில் — மேனாட்டு விஞ்ஞானம் இறங்கியிருக்கிறது. இது நல்ல சகுனம். மனித சமுதாயத்திற்கு ஓர் ஒளி நிறைந்த எதிர்கால மிருப்பதை இது காட்டுகிறது. மனிதன் தேவனாகும் முறை பூமியில் தோன்றுகிறது என்றுதான் கூற வேண்டும்.

நான் பிரபஞ்ச அறிவு பற்றி எழுதியபோது எனக்குள் தயக்கமிருந்தது. பழமைக்குள் போய்விடும் ஒரு பயம். வயோதிகத்தினுள் போய்விடும் ஒருசந்தேகம். ஆனால் வளரும் விஞ்ஞான அறிவைப் படிக்கப் படிக்க நமது முந்தையர் செய்த விந்தைகளும் நமது ஞானத் தந்தையர் காட்டிய வழிகளும் எவ்வளவு அபூர்வ மானவை, அற்புதமானவை என்ற எண்ணங்களில் திளைத்தேன். மிதந்தேன். நமது பெரும் சொத்தை

அறியாது அனுபவிக்காது போவது, நமது பெரியவர் காட்டிய வழியில் நடக்காது போவது எத்தகைய பேரிழப்பாகும் என்பதை உணர்ந்தேன்.

"பிரபஞ்சம் எங்கே இருக்கிறது? நமது ஊர் ஞானி என்ன எல்லாம் தெரிந்தவரா? மேனாட்டு விஞ்ஞானத் திற்கெதிரே அவர் பேதையாக, பைத்தியக்காரராக அல்லவா நிற்பார்" என்பன போன்ற கேள்விகளுக்குப் பதிலாக சமீபத்தில் டாக்டர் ரிச்சர்டு செல்சர் எழுதிய ஒரு சம்பவத்தை இங்கே மொழிபெயர்க்க ஆசைப்படு கிறேன். டாக்டர் செல்சர், யேல் பல்கலைக் கழக மருத்துவமனையில் ஒரு மருத்துவர். புகழ்பெற்றுவரும் சிறந்த எழுத்தாளர். டாக்டர் செல்சர் எழுதுகிறார்:

"ஏஷி தோண்டன், வரும் ஜூன் 10-ம் தேதி காலை ஆறு மணிக்கு நமது மருத்துவமனைக்கு வந்து நோயாளிகளைப் பார்ப்பார். தோண்டன், 'தலாய்லாமா வின் மருத்துவர்' என்ற அறிவிப்பைப் பலகையில் பார்த்தேன். கடவுளரிடமிருந்து வரும் ஒரு தூதுவரை நம்பாத அளவுக்கு நான் ஒரு சந்தேகப் பிராணி அல்ல.

ஜூன் 10-ம் தேதி, நான் மற்ற மருத்துவர்களுடன் வெள்ளைக் கோட்டுடன் நிற்கிறேன்.

அந்த அறை, பிற டாக்டர்களின் வெளிப்படை யான சந்தேகங்களால் கனத்துக் கொண்டிருந்தது. சரியாக மணி ஆறு. ஒரு சிறிய உருவம். பொன் நிறம், கையில்லாத அங்கியில் புத்தபிக்குகளுக்கே உரித்தான வண்ண அங்கியில் தோன்றுகிறார். நன்றாக க்ஷவரம் செய்யப்பட்ட தலை. பெயருக்கு, கண்ணுக்கு மேல்

இமையில் ஒரு வரி மயிர். மொழிபெயர்ப்பாளர், ஓர் இளைஞர், தோண்டனை அறிமுகம் செய்து வைக்கிறார். தோண்டன் தலைகுனிந்து வணக்கம் தெரிவிக்கிறார். மருத்துவர்கள் தேர்ந்தெடுத்த ஒரு நோயாளியை தோண்டன் பார்ப்பார் என்று அறிவிக்கப் பட்டது. அந்நோய் என்னவென்று ஏஷி தோண்டனுக்குத் தெரியாது. மருத்துவர்களாகிய எங்களுக்கும் தெரியாது. தோண்டன் எங்கள் முன்னிலையில் சோதனை செய்வார். பிறகு நாங்கள் மீண்டும் கூடுவோம் தோண்டனுடன். தோண்டன் அப்போது நோயினை விளக்குவார்.'' இது ஏற்பாடு.

அந்தக் குறிப்பிட்ட நோயாளிக்கு முன்னமே செய்தி அனுப்பப்பட்டது. ஒரு வெளிநாட்டு மருத்துவர் வரப் போகிறார் என்று காலை எழுந்தவுடன் சிறுநீர் பிடித்து வைக்குமாறு நோயாளிக்குச் சொல்லி இருந்தார்கள். ஆகவே, நாங்கள் அந்த அறையினுள் போகும்போது அந்தப் பெண்மணி ஏதும் ஆச்சரியப்படவில்லை. விடிவில்லாத வியாதி என்ற ஒரு நிச்சலனமான விரக்தியும், மருத்துவர்கள் கூறும் எதையும் செய்யத் தயாராயிருக்கும் ஒரு மனோபாவமும் நோயாளியிடை இருந்தது. அவர் எத்தனையோ முடிவில்லாத சோதனைகளுக்கு உட்பட்டிருக்கிறார். அதில் இது ஒன்று!

ஏஷி தோண்டன் அந்தப் பெண்மணியின் படுக்கையருகில் செல்கிறார். நாங்கள் தள்ளி நிற்கிறோம். அந்தப் பெண்மணியை நெடுநேரம் உற்று நோக்குகிறார். பொதுவான பார்வை. அவருடைய கண்கள் அந்தப் படுத்திருக்கும் உருவத்திற்குச் சற்று உயரே உலவுவது போல தோன்றுகிறது. நானும் பார்க்-

கிறேன். எந்தப் புற அடையாளமோ அறிகுறியோ இல்லை. அந்தப் பெண்மணியின் வியாதியை நிர்ணயிக்கும் எந்த அறிகுறியும் இல்லை.

கடைசியாக அந்தப் பெண்மணியின் கையைத் தன் கைகளில் எடுத்துக் கொள்கிறார். அவரது உடல் படுக்கையை நோக்கிச் சாய்ந்தவாறு நிற்கிறது. தலை குனிந்திருக்கிறது. கண்களை மூடிய வண்ணம் நாடி பார்க்கிறார். ஏதோ அவர் கண்டுபிடித்து விட்டாற் போல் தோன்றுகிறது. அடுத்த அரை மணிநேரம், ஏதோ ஓர் அதிசயமான தங்கப் பறவை அந்த நோயாளி யின்மீது தன் இறக்கைகளை விரித்து ஆதரவு தருவது போல் தோன்றுகிறது. அவருடைய உடல் பூராவிலு முள்ள எல்லா சக்தியும் இந்த ஒரே காரணத்திற்காக வடித்துச் செயல்படுவது போல் தோன்றுகிறது. தோண்டனும் அவரது நோயாளியும் உலகைக் கடந்த தனிமையில் உலவுவது போல், வேறெதுவும் அதை அசைக்க முடியாதது போல் தோன்றுகிறது. அந்தப் பெண்மணி அடிக்கடி தலையைத் தூக்கி அந்த அதிசய சிறிய உருவத்தைப் பார்க்கிறார். பின், படுக்கையில் ஆழ்ந்து போகிறார்.

நான் எத்தனையோ கைகளைத் தொட்டு ஆயிரக் கணக்கில் நாடி பார்த்திருக்கிறேன். அந்தப் பெண் மணியைப் போல தொடப்பட வேண்டும். நாமும் அந்தத் தவப்பயனைப் பெறவேண்டும் என்ற உணர்வு எனக்கேற்படுகிறது. எனக்கே அந்தப் பெண்மணி யிடம் பொறாமை ஏற்படுகிறது.

கடைசியில் அந்தப் பெண்மணியின் கையை மெது வாகப் படுக்கையில் வைக்கிறார். மொழிபெயர்ப்பாளர் சிறு மரக்கிண்ணத்தையும் இரு குச்சிகளையும் எடுத்து

நீட்டுகிறார். தோண்டன், நோயாளியின் சிறுநீரைக் கொஞ்சம் ஊற்றுகிறார் அதில். இரு குச்சிகளின் மூலம் சிறுநீரைக் கலக்குகிறார். குனிந்து அதை மூன்று முறை முகர்கிறார். மரக்கிண்ணத்தைக் கீழே வைத்து விட்டு வெளியே செல்ல ஆயத்தமாகிறார். இதுவரை ஒரு வார்த்தை அவர் வாயிலிருந்து புறப்படவில்லை. அவர் அந்தக் கதவை நோக்கிப் போகும்போது அந்தப் பெண்மணி தலையைத் தூக்கிப் பேசுகிறார். அவசர மான ஒலி; ஆனால் அமைதியாக ஒலிக்கிறது; "நன்றி டாக்டர்!" அந்தப் பெண்மணியின் மறு கை தோண்டன் விட்டுப் போன கையை வருடிக் கொடுக் கிறது.

ஏஷி தோண்டன் அந்தப் பெண்மணியை மீண்டும் பார்க்கிறார். வெளியேறுகிறார்.

நாங்கள் விவாதிக்க அறையில் உட்கார்ந்திருக் கிறோம். ஏஷி தோண்டன் முதன் முறையாகப் பேசத் துவங்குகிறார். சாந்தமான திபேத்திய மொழி. நான் இதுவரை கேட்டதில்லை. மொழிபெயர்ப்பாளர் மொழி பெயர்த்துச் சொல்கிறார்.

அந்தப் பெண்மணியின் உடம்பில் ஓடும் காற் றைப் பற்றிக் கூறுகிறார். தடுப்புக்களை எதிர்த்துச் சீற ஒரு சுழலை ஏற்படுத்துகிறது என்கிறார். இந்த வளையங்கள் அவர் ரத்தத்தில் இருக்கிறது என்கிறார். பிறப்பதற்கு முன்பே அப்பெண்மணயின் இதய அறைகளிடையே ஒரு காற்று புகுந்து திறக்கக் கூடாத கதவைத் திறந்துவிட்டதாகக் கூறுகிறார். இதன் விளைவாக முழுத் தண்ணீரும் வெள்ளமாக ஓடுகிறது. மலையிலிருந்து ஓடிவரும் வேகம் நிறைந்த நீரோடை வழியில் கிடக்கும் கல்லையும் மண்ணையும்

அப்புறப் படுத்திக்கொண்டு போவதுபோல அப்பெண் மணியின் மூச்சைத் திணற அடிக்கிறது. இப்படிச் சொல்லிவிட்டுப் பேசாமலிருக்கிறார் தோண்டன்.

"என்ன நோய் என்ற உங்கள் முடிவைத் தருவீர்களா?" என்று ஒருபேராசிரியர் கேட்கிறார்.

தோண்டனை அழைத்து வந்த மருத்துவர், அவர் பேசியதைப் புரிந்துகொண்ட ஒரே மனிதர் பதிலளிக்கிறார்: "இதயத்தில் பிறவிக் குறைபாடு, (வெண்டிரிகிள்) இதயத்தின் கீழ்ப்பகுதியிலுள்ள இரண்டு அறைகளுக்குமிடையே உள்ள தடுப்பு சரியே இயங்கவில்லை; இதன் விளைவாக இதயக்கோளாறு (Intra Ventricular Septal Defect).

'இதயத்தில் கதவு. அதைத் திறக்கக்கூடாது அதன் வழியே ஓடுகிற தண்ணீர் அவள் மூச்சைத் திணற அடிக்கிறது' என்று என் எண்ணம் ஓடுகிறது 'இதோ ஒரு டாக்டர்! அந்த ஓட்டத்தின் ஒலிகளைக் கேட்டு உணரக்கூடிய ஒரு டாக்டர். நாங்களெல்லாம் அந்த வகையில் செவிடர்கள்! அவர் மருத்துவர் மட்டுமல்ல, அதற்கு மேல் பூஜை செய்பவர், ஞானி!'

காலையில் நோயாளிகளைப் பார்க்கச் செல்லும்போது அவ்வப்போது அவரது குரலை நான் கேட்பதுண்டு. பழைய புத்த பிரார்த்தனைபோல அது ஒலிக்கிறது. அதன் அர்த்தம் மறந்து நாளாகிவிட்டது; ஆனால் அந்த இசை இன்னும் இருக்கிறது. என்னை மீறிய ஒரு குதூகலம் என்னை ஆட்கொள்கிறது; ஏதோ தெய்வீகம் என்னைத் தொட்ட உணர்வு."



# 12. மாறா உண்மைகள்

அன்றாட வாழ்வில் நாம் காணும் உலகம், ஓர் உலகம். அங்கே நமது வாழ்க்கைப் போராட்டம் துவங்குகிறது; தொடர்ந்து நடக்கிறது. முன்னேற விரும்புகிறோம்; துடிக்கிறோம். நமது ஆசைகளும் அபிலாஷைகளும் அங்கே மோதுகின்றன. அங்கே உயர் லட்சியங்கள் இருக்கின்றன. நியாயம், உண்மை, நேர்மை, பெருந்தன்மை, லட்சியம், காதல், உதவி செய்தல் போன்ற நல்ல குணங்கள் இருக்கின்றன. அத்துடன் அங்கே காமம், பொறாமை, வெறுப்பு, பயம், பகை, திமிர் போன்ற பல்வேறு வகை உணர்ச்சிகளும் அன்றாட வாழ்வில் உலகில் தலை எடுப்பதைக் கவனிக்கிறோம்.

திடீரென்று நாம் எதிர்பாராத வகையில் சில நல்ல காரியங்கள் நிகழும்போதோ, அல்லது ஒரு விபத்து அல்லது ஓர் எதிர்பாராத நெருக்கடி ஏற்படும்போதோ நாம் வேறு உலகிற்குச் செல்கிறோம். நமது

அறிவுக்கும் அனுபவத்திற்கும் புலப்படாத செயல்களும் சம்பவங்களும் நம்மை வேறு ஒரு சிந்தனை உலகிற்கு அழைத்துச் செல்கின்றன.

அப்போது நமது நடைமுறை அறிவு அதற்கப்பால் சென்று, விளக்க முடியாத சம்பவங்களுக்கு விளக்கம் தேடி, அப்பாலுள்ளதற்கு ஓர் அறிவுப் பாலம் அமைக்க முயல்கிறது.

'வாழ்வில் வெற்றிக்கான வழிகள் என்ன, நாம் எண்ணுவதை அடையும் மார்க்கம் என்ன' என்ற சிந்தனைகளுடன் நம்மை நெருக்கிக் கொள்ளும்போது நாம் குறுகிய இடத்தில் செயல்படுகிறோம். வாழ்வின் வெற்றியும், சாதனைகளும் பிரபஞ்ச இயக்கம் என்ற பரந்த படுதாவில் சித்திரமாக எழுதப்படும்போது நம் வாழ்க்கை முழுமை பெறுகிறது.

இப்பிரபஞ்ச இயக்கத்தில் சில மாறா உண்மைகள் இருக்கின்றன. அதை அறிந்து கொண்டு அதன் அடிப்படைகளை ஆதாரமாகக் கொண்டு செயல்பட்டோமானால், நம் வாழ்வு சிறப்புடன் அமைவது எளிதாகும். அப்படி இப்பிரஞ்ச இயக்கத்தின் உண்மைகளை அறிந்து செயல்பட்ட பலர் நம்மிடையே வாழ்கிறார்கள்; வாழ்ந்திருக்கிறார்கள்.

தனி மனித வாழ்க்கைக்கும், சமுதாய வாழ்க்கைக்கும் அப்படி ஒளியூட்டிய ஓர் அற்புத மனிதர் மகாத்மா காந்தி ஆவார். வெறும் அரசியல் தலைவர்களோ நாடு என்ற எல்லைக்குட்பட்டுச் செயல்படுகின்றனர். காந்தி போன்றவர்களோ மனிதகுலத் தலைவர்களாகிறார்கள்.

உலக இயக்கத்தின் அடிப்படைகளை அறிவு மூலம் நாம் சேகரிக்கலாம். அப்படி இல்லாது காந்தி போன்றோரின் வாழ்க்கைச் சரித்திரத்தைப் படிப்பதன் மூலம் அறியலாம். "காந்தியின் சரித்திரத்தை நான் அடிக்கடி படிப்பது உண்டு. படித்த பத்து நாள் வரை நான் ஆதிமனிதனாக உலவ விரும்பும் உத்வேகம் என்னை ஆட்கொண்டிருக்கும்" என்கிறார் ஓர் அறிஞர்.

இப்பிரபஞ்ச இயக்கத்தின் உண்மைகள்தான் என்ன?

நமக்கு மேற்பட்ட பிரபஞ்ச அறிவு, சக்தி ஒன்று நம்மைச் சுற்றிச் செயல்படுகிறது என்பது முதலாவதாகும். இதைப்பற்றி விரிவாக முந்தைய கட்டுரைகளில் பார்த்திருக்கிறோம்.

இரண்டாவது: ஒரு பொருள் எந்தக் குணநலன்களுள்ளதோ அது, அதே குணநலன்களுள்ள பிற பொருள்களை ஈர்க்கிறது என்பதாகும். இந்த விதியின் மூலம்தான் நமது ஆசைகள், கனவுகள், லட்சியங்கள் எல்லாம் சாதனைகளாக நிறைவு பெறுகின்றன. நாம் எதைப்பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கிறோமோ அதாகவே ஆகிறோம். இதையேதான் புத்தர், "தூய்மையான எண்ணங்களும் செயல்களும் கொண்டவர்கள் வாழ்வில் மகிழ்ச்சி தொடர்கிறது, மனிதனை நிழல் தொடர்வது போல" என்று கூறுகிறார். அதையே உபநிஷதம் கூறுகிறது, "நீயே அது" என்று. எதுவாக நினைக்கிறோமோ அதுவாக ஆகிறோம். "அப்படியானால் இவ்வுலகத் தோற்றங்கள், இயல்புகள் அனைத்தும் மனித மனத்தின் எண்ணங்களால் எழுந்த புறத் தோற்றங்கள் தானா?" என்ற ஒரு பெரிய கேள்வியை ஒரு

மனோதத்துவ நிபுணர் எழுப்புகிறார். ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய விஷயம். ஏனெனில் 'மாயை' என்று அடிக்கடி கூறப்படும் நமது சித்தாந்தங் களுக்கும், இந்த மனோதத்துவரின் கேள்விக்கும் தொடர்பு இருக்கிறாற்போல் தோன்றுகிறது.

ஆகவேதான் நாம் நம் வாழ்வில் நன்மை பெற விரும்பினால் நன்மை பற்றியே சிந்திக்க வேண்டும்; நல்ல விஷயங்கள் பற்றியே சிந்திக்க வேண்டும். ஏனெனில் எந்த எண்ணமும் அதற்கு ஒத்த எண்ணங் களை ஈர்க்கிறது. தொழில் துவங்க விரும்பும் ஒருவன் பணமில்லாமல் தவிக்கும்போது, அவனுக்குப் பணக் காரர்களின் தொடர்பு ஏற்படுகிறது. வெற்றியைப் பற்றி எண்ணிக் கொண்டிருப்பவனுக்கு வெற்றி கிட்டு கிறது. "ஒரு நாடகத்தைப் படிக்கும்போதே அந்த அரச வேஷத்தில் நான் உலவி வருவேன்" என்றார் ஒரு புகழ்பெற்ற நடிகர்.

எண்ணங்கள் அதே வகை எண்ணங்களை சிருஷ் டிப்பதற்கும், நமது நல்லெண்ணங்கள் நம்மையே வந்து அடைவதற்கும். அதேபோல நமது தீய எண்ணங்கள் நம்மிடமிருந்து புறப்பட்டு முடிவில் நம்மையே வந்து அடைந்து நமக்குத் தீமை பயப்ப தற்கும் விஞ்ஞான ரீதியில் ஆதாரம் இருக்கிறது.

எண்ணங்கள் ஒருமுகப்படும்போது ஒளி பிறப்ப தாக ஞானிகள் கூறுகிறார்கள். எண்ணம் ஒரு வகை ஒளி. அது மின் காந்த சக்தியல்ல; புவியீர்ப்பு சக்தி யல்ல. அணுவின் கருப்பொருள் சக்தியல்ல என்று விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். அதற்கான விஞ்ஞான சோதனைகளைச் செய்திருக்கிறார்கள். ஒளி, நேர்

கோட்டில் செல்கிறது என்று படித்து வந்ததை 'ஒளி வளைகிறது, வளைய முடியும்' என்று ஐன்ஸ்டைன் ஒரு கணக்கின் மூலம் கூறினார். பின்னால் கிரகணத் தின்போது நிகழ்த்திய சோதனைகள் "ஒளி உண்மை யிலேயே வளைகிறது, காந்த சக்தி போல" என்ற உண்மையை நிரூபித்தன. அதாவது புறப்படும் ஒளி புறப்பட்ட இடத்திற்கே வந்து சேரும். அதாவது இப் பிரபஞ்சம் ஒரு வட்டத்தில் செயல்படுகிறது. அது உண்மையானால எண்ண சக்திபுறப்பட்ட இடத்திற்கே வந்து சேருவதில் வியப்பென்ன? நல்லதை விரும்பும் போது நமக்கு நன்மை விளைவதிலும் பிறருக்குத் தீமைபயக்கும் எண்ணங்களைக் கொள்ளும்போது, அத் தீமை பயக்கும் எண்ணங்கள் புறப்பட்ட இடமான நம்மையே வந்து தாக்குவதிலும் என்ன அதிசயம் இருக்க முடியும்?

இந்த மூன்றாவது பேருண்மையை நாம் தெரிந்து கொள்ளும்போது, இப் பிரபஞ்சம் இப்படித்தான் இயங்குகிறது என்று அறிந்து கொள்ளும்போது, எந்த அறிவுள்ள மனிதன் பிறன் கெட்டுப்போக நினைப்பான்? எண்ணிப் பாருங்கள். காம, குரோத, மோக, மத, மாச்சரியங்கள் என்றும் பஞ்சமா பாதகங்கள் என்றும் நம் பெரியோர் எழுதி வைத்தார் களே, ஏன் என்று யோசித்துப் பாருங்கள். காரணம் வேறல்ல. அவை புறப்பட்ட இடத்திற்கே திரும்ப வருகின்றன. இது உலக நியதி, பிரபஞ்ச நியதி.

ஆகவேதான் படுக்கப் போகும்போது எதிரியையும் மன்னித்துவிட்டுப் படுக்கப்போவது நமக்கு நாமே செய்துகொள்ளும் நல்ல காரியமாகும். ஆகவேதான் காந்தி கூறினார். மதன்லால் என்ற வெறியன் அவர்

மீது குண்டு விட்டெறிந்த போது 'அவனை மன்னித்து விடுங்கள்' என்று.

இவ்வுலகம், இப்பிரபஞ்சம் ஒரு நியதியில் ஒரு நெறியில் இயங்குகிறது. அதை உணராத போது நாமறியாத சக்திகளின் கையில் நம்மை ஒப்படைத்து அல்லல்படுகிறோம். சட்டங்களைப் பற்றிய ஞானம் எனக்கு இல்லை. சட்டம் தெரியாது என்று கூறி யாரும் சட்டத்திலிருந்து தப்புவதில்லை. சட்டம் தன் பலனை, தன் தண்டனையைத் தந்துவிடுகிறது.

உலக நியதிகளுக்கு — மாறா உண்மைகளுக்கு— இயைந்த வகையில் வாழ்க்கையை அமைத்துக் கொள்வது, நடத்திச் செல்வது, இயற்கையை நம் வழிக்குப் பயன்படுத்திக் கொள்வதாகும்.

# 13. நிரந்தர உண்மைகள்



வாழ்வில் முன்னேறத் துடிக்கும் நாம், உலகம் ஒரு நியாயத்திற்குக் கட்டுப்பட்டு இயங்கி வருவதை உணரவேண்டும். உலகில் நிகழும் எல்லாவித காரியங்களும் ஒரு காரணத்தின் விளைவாகவே நிகழ்கின்றன. விதையிலிருந்துதான் செடி கிளம்புகிறது. ஓர் எண்ணத்திலிருந்துதான் செயல் பிறக்கிறது. காரணம் இல்லாமல் காரியமில்லை. நாம் ஒரு காரியத்தைத் துவக்கினோமானால் அதன் விளைவுகளை எதிர்பார்க்க வேண்டும். அதற்கு நம்மைத் தயார் செய்து கொள்ள வேண்டும். 'முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்' என்று நமது பெரியவர்கள் அழகாகக் கூறியிருக்கிறார்கள். ஆக, நாம் துவக்கும் செயல்களின் விளைவுகளிலிருந்து தப்பிக்க முடியாது. திருடுபவர்களும், பொய் சொல்பவர்களும், "யார் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்?" என்ற தன்னம்பிக்கையில் பல சமயம் தவறிழைக்கிறார்கள். அங்கே நியாயம் பார்த்துக் கொண்டிருக்கிறது. உண்மை உற்று நோக்கிக் கொண்டிருக்கிறது என்பதை அவர்கள் மறந்து விடுகிறார்கள்.

தன் மனைவி கண்ணகியை அழைத்துக் கொண்டு வறியவனாய் மதுரை நோக்கிச் செல்லும் கோவலனைப் பார்த்து மாடலன் கேட்கிறான்: "நானறிந்தவரை இம்மையில் நீ செய்தவை எல்லாம் நல்ல காரியங்கள். எப்படி நேர்ந்தது இக்கதி உனக்கு?" என. இளங்கோ வடிகள் மறைமுகமாக "ஊழ்வினை வந்து உறுத்த," இப்படி நேர்ந்தது கோவலனுக்கு என்று எடுத்துக் காட்டுகிறார். சில சமயம் விளையும் பலன்களுக்கான காரணங்கள் நமக்குப் புரிவதில்லை. அதற்காக "இவ் வுலகம் தறிகெட்டு நடக்கிறது, வாய்த்தவர்களுக்கு வாழ்க்கை" என்று சிலர் வறட்டுத் தத்துவம் பேசு கிறார்கள். இவ்வுலகில் நமக்குத் தெரியாத—விஞ்ஞானி களால் கண்டுபிடிக்க முடியாத எத்தனையோ விஷயங்கள் இருக்கின்றன.

நான்காவதாக, இவ்வுலகில் எல்லாவற்றிற்கும் ஒரு காலம் உண்டு என்பதை நாம் உணரவேண்டும். பூக்கள் வசந்த காலத்தில்தான் பூக்கின்றன. பழங்கள் பருவ காலங்களில்தான் பழுக்கின்றன. குழந்தை ஒரு குறிப்பிட்ட வயது வளர்ந்த பிறகுதான் இளைஞனா கிறான். அதேபோல சில காரியங்கள் நடப்பதற்கும் சில காலம் நேரம் தேவைப்படுகிறது. ஒரு காரியம் நிகழ்வதற்கு அதற்கேற்ற சூழ்நிலை வேண்டி இருக் கிறது. சூழ்நிலை வாய்ப்பாக அமையப் பல மனிதர்கள், சம்பவங்கள் என்று பல விஷயங்கள் சேர்ந்து இயங்க வேண்டி இருக்கிறது.

இந்த உணர்வு தேவை. அதற்கு வேண்டிய பொறுமை தேவை. மனப்பக்குவம் தேவை.

தடி கொண்டு அடித்துக் காயைக் கனியாக்கி விட முடிவதில்லை. இந்த மகத்தான உண்மையை நாம்

புரிந்துகொள்ள வேண்டும். இதைப் புரிந்து கொள்ளாத போது, அவசரப்படும்போது அதற்கு நேர் எதிரான பலன்கள் புறப்படுவதைக் காணலாம். ஒரு குறிப்பிட்ட நாள் அடைகாத்த பின்தான் முட்டை குஞ்சாகிறது. ஒவ்வொன்றுக்கும் ஒரு பருவ காலம் உண்டு.

சதா சிந்தியுங்கள். செயல்படுங்கள். அத்துடன் இயற்கையுடன் ஒத்துப் போங்கள். இரவில் விழித்திக் கொண்டு இருப்பவனுக்கு இரவு நீண்டதாய்த் தோன்றும். நோயில் வாடுபவனுக்கு இரவு நேரம் என்றுமே விடியாத இரவாய்த் தோன்றும். நம் அடிமனத்தில் 'பொழுது விடியப் போகிறது' என்ற நினைவு தேவை. பொழுது விடிவதை எதிர்நோக்கும் மனோபாவம் தேவை. அத்துடன் இரவுக்கெதிராகக் கூச்சலிட்டு ஆர்ப்பாட்டம் செய்வதை விடுவித்து இரவையும் ரசிக்கத் தெரிந்தவனே — இரவின் அமைதியையும் குளிரையும் அனுபவிக்கத் தெரிந்தவனே — வாழ்க்கையை வெற்றி காண்கிறான்.

ஐந்தாவதாக, பொருளும் சக்தியும் ஒன்றே என்ற உணர்வு, நம்மை நமது சூழ்நிலையின் நண்பனாக்குகிறது. அணுசக்தியில் பொருள் உடைந்து சக்தியாக வெளிவருகிறது. மன மருத்துவர்கள் மூளைக்கும் மனத்திற்குமுள்ள தொடர்பைப் பற்றி ஆராய்ந்து வருகின்றனர். அவர்களுடைய அதிசயம், மூளை, என்ற சடப்பொருள், எப்படி எண்ணம் என்கிற சடமல்லாத பொருளாக மாறுகிறது என்பதாகும். கல்லும் மண்ணும், தாவரமும், மிருகமும், மனித இனமும் வெவ்வேறு விழிப்பு நிலை பெற்ற சடப்பொருள்கள் என்ற உணர்வு நமக்கும் நமது சூழ்நிலைக்கும்

ஒரு தொடர்பேற்றுகிறது. அதையே "வானில் மின்னும் நட்சத்திரங்களுக்கு இப்பிரபஞ்சத்தில் இடம் இருப்பது எவ்வளவு உரிமையோ, அதே உரிமை மனிதனாகிய உனக்கும் இவ்வுலகில் இருக்கிறது" என்றார் தத்துவ ஞானி. இதன் மூலம் எல்லாப் பொருட்களையும், எல்லா மனிதர்களையும் சமமாக நோக்கும், அகங்கா மற்ற நிலையில் பார்க்கும் ஓர் அறிவு நம்மை அடைகிறது.

ஓர் அணுவை எடுத்துக் கொண்டோமானால் அதில் நடுவிலே கருப்பொருளும் அதைச் சுற்றி எலக்ட்ரான்களும் ஓடுகின்றன என்று விஞ்ஞானம் கூறுகிறது.

அந்த எலக்ட்ரான்கள் திடப்பொருளாலான ஒரு புள்ளியா அல்லது மேகக் கூட்டம் போன்ற ஓடுகின்ற சக்தியா என்பதை அறுதியிட்டு உரைக்க இயலாது என்று பௌதிகம், கூறுகிறது. ஹைசன்பர்க் என்ற விஞ்ஞானி அதையே 'நிலையற்ற தன்மை' (Uncertainity Principle) என்கிறார்.

"இத்தகைய பல கோடி அணுக்களினால்தான் மனிதன் ஆகியிருக்கிறான். பொருள் சக்தியாக மாறும் தன்மையும், எலக்ட்ரானின் நிலையற்ற தன்மையுமே, மனித அளவில் மூளைமனமாக பொருள்-சக்தி வடிவம் பெற்றிருக்கிறது போலும்" என விஞ்ஞானிகள் ஹேஷ்யம் செய்கின்றனர்.

கடைசியாக ஆறாவதாக, இவ்வுலகம் ஒரு கட்டுப் பாட்டில் இயங்கி வருகிறது. கோள்கள் ஒன்றுக் கொன்று ஒரு பரஸ்பர கவர்ச்சியில், ஈர்ப்பு சக்தியில் இயங்கி வருகின்றன. மனிதர்களுக்கிடையே நிலவும்

அத்தகைய சக்தியைக் கவர்ச்சி என்றும், அன்பு என்றும், காதல் என்றும் கூறுகின்றோம். பிறருடைய உரிமைகளுக்கு ஊறு விளைவிக்காத வகையில் ஒரு கட்டுப்பாட்டுடன், ஒரு நெறியில் நம் வாழ்க்கையை இயக்கும்போது நாம் நமது வாழ்வின் தலைவனாகிறோம். நமது விதியை நாம் நிர்ணயிக்கிறோம். கட்டுப்பாடு இல்லாத, நெறியில்லாத, நிதானமில்லாத வாழ்க்கை, தறிகெட்டு ஓடும் கொம்புக் காளைக்குச் சமமாகும். அது பிறரைப் புண்படுத்துவதுடன் தன் வாழ்விற்கும் ஊறு விளைவித்துக் கொள்கிறது.

உணவு, உழைப்பு, தேகப்பயிற்சி, உடலுறவு என்று எதை எடுத்துக்கொண்டாலும் நெறியில்லாத நிலையில் அதன் விதி என்ன என்று யோசித்துப் பாருங்கள். அளவுக்கு மிஞ்சி உண்பவன் நோய்க்கு ஆளாகிறான். அளவுக்கு மிஞ்சி போகிப்பவனும் அப்படியே தன்னை அழித்துக்கொள்கிறான்.

தமிழிலக்கியத்தில் பேசப்படும் கற்பு அத்தகைய ஒரு நெறியாகும். அந்த நெறிக்கு மகத்தான வலிமை உண்டு. அந்த நெறியுள்ளவர்களால் எதனையும் சாதிக்க இயலும். அவர்கள் எதையும் கண்டு அஞ்சுவதில்லை. பட்டினி, விரதம் என்பவை இந்த நெறியை வளர்க்கும் மனப்பயிற்சிகளாகும்.

நெறி என்பது கற்பில் மட்டுமல்ல, எல்லாத் துறைகளிலும் இருக்கவேண்டிய ஒன்று. துரதிர்ஷ்டவசமாக நம் நாட்டில் கண்ணகியின் கற்பு நெறிகள், பேசப்படுகிற அளவிற்குச் சமுதாய நெறிகள் கடைப்பிடிக்கப்படுவதில்லை.



# 1. பிரார்த்தனை

ஐக்கிய நாடுகள் சபை வெளியிட்ட 'ஸ்டாம்பு' ஒன்றில் "உலக சமாதானத்திற்குப் பிரார்த்தனை செய்யுங்கள்" என்ற உருக்கமான வேண்டுகோள் என் கண்ணில் பட்டது. அடுத்து, துறவறம் பூண்டு மக்கள் பணியில் ஈடுபட்டுள்ள ஓர் அம்மையாரிட மிருந்து எனக்குக் கடிதம் வந்திருந்தது. "உங்கள் கடிதம் எனது மேஜைமீது இருக்கிறது; தினமும் பிரார்த்திக்கிறேன். இத்தனை நாள் பலன் கண்டிருப் பீர்களே?" என்று எழுதிய கடிதம். எனக்கு ரோமம் சிலிர்க்கிறது. ஏனெனில் எனது பிரச்னைக்கு வழி பிறந்தது மட்டுமல்ல, எனது நண்பரும் துறவியுமான அந்த அம்மையாரின் அசைக்கமுடியாத நம்பிக்கை இத்தனை நாள் பலன் கிடைத்திருக்க வேண்டுமே என்ற உறுதி என்னைப் பேச்சிழக்கச் செய்கிறது.

ஆம், அதுதான் பிரார்த்தனை. பிரார்த்தனைக்கு உள்ள சக்தி மகத்தான சக்தி. பிரார்த்தனை பல சமயம் அதிசயங்களைச் சாதிக்கிறது. நம்மால் நம்ப முடிவ தில்லை. ஆனால் பிரார்த்தனையில் மட்டும் நம்பிககை—

ஆழ்ந்த நம்பிக்கை—இருந்துவிட்டால் அது பலனைப் பல வேறு வழிகளில் தோற்றுவிக்கிறது.

"பிரார்த்தனையை மன நூலார் ஆராய்ந்திருக்கின்றனர். நமது வேண்டுகோள் ஆழ்மனத்திற்குச் சென்று பதிவாகிறது. ஆழ்மனத்தில் தீர்மானமாகப் பதிந்த எண்ணம் புற உலகத் தொடர்புகொண்டு காரியங்களைச் சாதிக்கிறது. இது மனத்தின் பேரியல்பு. இதை 'Auto Hypnosis?' என்று கூறுகின்றனர். விஞ்ஞான உலகில் குறிப்பாக, மருத்துவ உலகில் இது விளைவிக்கும் அதிசயங்களை மருத்துவர்களால் விளக்க முடிவதில்லை. விஞ்ஞானம் படித்துவிட்டு, மருத்துவம் செய்கிறோம். இது தேறாத 'கேஸ்' என்று கைவிட்டு விடுகிறோம். ஆனால் அத்தகைய நோயாளிகளில் பலர் பூரண குணமாயிருப்பதை என்னால் விளக்க முடிவதில்லை. அத்துடன் ஆண்டவனைச் சம்பந்தப்படுத்திப் பேசுவது எனது மேற்படிப்பிற்கு இழுக்காகிறது. ஆனால் சில மத குருமார்கள் கடவுள் பக்தி உள்ளவர்கள் மருத்துவத்திற்கும் மதத்திற்கும் பணிபுரிகிறார்கள்" என்று கூறுகிறார் பிலடெல்பியாவைச் சேர்ந்த ஒரு மருத்துவர்.

"நம்பிக்கையோடு செய்யப்படும் பிரார்த்தனை நோயாளிகளின் உயிர்களை மீட்கும்" என்று சந்தேகத்துக்கு இடம் இல்லாது கூறுகிறது பைபிள்.

யோகம், தியானம் இவற்றிற்கு அடுத்த நிலையில் எல்லோரும் ஈடுபடக்கூடிய ஒரு மன சாதனை இருக்கிறதென்றால் அதுதான் பிரார்த்தனை. பிரார்த்தனைக்குத் தெய்வம் வேண்டும் என்பதில்லை. ஆனால் தெய்வீகம் வேண்டும். ஓர் ஒருமைப்பட்ட உணர்வு, ஆழ்ந்த நம்பிக்கை தேவை.

“பிரார்த்தனை செய்யும்போது உள்ளே இருக்கும் ஏதோ ஒன்று உயிர் பெறுகிறது. புதிய துடிப்பு துவங்குகிறது. நீரில் ஏற்படும் அலைபோல, அந்தத் துடிப்பு புறஉலகில் அதற்கேற்ற துடிப்பை — உயிரை உருவாக்குகிறது” என்று விளக்குகிறார்கள் தத்துவ ஞானிகள்.

பிரார்த்தனை, படித்தவர்களின் அங்கீகரிப்பிற்காகக் காத்திருப்பதில்லை. அதேபோல, படித்தவர்களின் சந்தேகங்களையும் பொருட்படுத்துவதில்லை. அதே போலப் படித்தவர்களுக்கு மட்டுமே பயன்படும் ஒரு சாதனமுமல்ல.

ஈடுபாடு கொள்ளத் தெரிந்தவர்களுக்கு, நம்பிக்கை கொண்டவர்களுக்கு அது தன் பலனை அளிக்கிறது. அது ஓர் உலக நியதி, பிரபஞ்ச நியதி!

பிரார்த்தனையைப்போல் எளிதான ஒரு சாதனம் இல்லை. அதற்காகத்தான் ஐக்கிய நாடுகள் சபையிலிருந்து, குக்கிராமம் வரை சமாதானத்திற்கும், மழை பெய்வதற்கும் என்று பிரார்த்தனை பயன்படுகிறது.

நடுக்கடலில் தத்தளித்த ரிக்கன் பேக்கரின் குரல், காலம், இடம் கலந்து போக வேண்டிய இடத்திற்குப் போய்ச் சேருகிறது. உதவி வருகிறது; ஆல்பிரட் டென்னிசன் என்ற ஆங்கிலக் கவி கூறுகிறார்: “நாம் கனவில் நினைப்பதற்கும் மேலாக, பிரார்த்தனை அதிசயங்களைச் சாதிக்கிறது” என்று.

நம்மிடம் கொடுக்க ஒன்றுமில்லாதபோது பிரார்த்தனை செய்யுங்கள்; ஏனெனில் பிறருக்குப் பிரார்த்தனையைக் கொடுப்பதைப்போல நல்ல பொருள் வேறில்லை. பிறருக்காகப் பிரார்த்தனை செய்யும்போது

அங்கே சுயநலம் இல்லை; பிறருக்காக உதவும் பெரிய இதயம் அங்கே நிலவுகிறது. பெரியவர்களது ஆசி நமக்கு நலன்களைக் கொண்டுவருவது அந்த நியதியில் தான். அன்புடன், கருணையுடன், அளவுகடந்த ஈடு பாட்டுடன் எண்ணப்படும் எண்ணம், பிரச்னைகளின் நல்ல முடிவாய், நன்மையாய் நம்மை வந்தெய்துகிறது.

பிரார்த்தனை என்பது பொங்கி வழியும் உணர்வு. எதையோ தொடும் ஆழமான உணர்வு. தேவையின் அவசரம் அதற்கு ஆழத்தையும் வலிமையையும் தருகிறது.

சிலர் கேட்கிறார்கள். 'பிரார்த்தனை அவ்வளவு வலிவுள்ளதென்றால் நாம் விரும்பும் எல்லாக் காரியமும் நாம் விரும்புகிறபடி நடக்க வேண்டியதுதானே' என்று. நல்ல கேள்வி. நமது விருப்பங்கள், ஆசைகள், வேண்டுகோள்கள் பிறரது உரிமைகளைப் பாதிக்காத வாறு அமைய வேண்டும். பிறரது நலங்களுக்கு இடையூறு விளைவிக்காதபோது அது பலன் தருகிறது. அத்துடன் வேறு சில உலக நியதிகளையும் அனுசரித்து அது இயங்குகிறது.

பரமஹம்ச யோகானந்தர், தனது சுய சரித்திரத் தில் எழுதுகிறார்: ''பள்ளிக்கூடத்துக் குழந்தைகள் அந்த மான் குட்டியைப் பெரிதும் ஆசையோடு வளர்த் தார்கள். ஒரு நாள் அது செத்துப் போயிற்று. குழந்தைகள் அழுத வண்ணம் என்னிடம் வந்து, 'நீங்கள்தான் யோகி ஆயிற்றே; அதை உயிர்ப்பித்துக் கொடுங்கள்' என்று அழுதார்கள். நான் என்ன செய்வது? குழந்தைகளுக்காக இரங்கிப் பிரார்த்தித்து மான்குட்டிக்கு உயிரூட்டினேன்; குழந்தைகளுக்குச்

சந்தோஷம். ஆனால் மான்குட்டி கேட்டது; 'நான் போகவேண்டும், நான் போகவேண்டிய தருணம் வந்து விட்டது. ஏன் இயற்கைக்கு எதிராக என் உயிரை இங்கு இழுக்கிறீர்கள்? என்னை விடுங்கள்' என்றது. நான் அதற்கு மேலும் எனது சக்தியினால் அவ்வுயிரைப் பிடித்து வைத்திருக்க விரும்பவில்லை."

யோகானந்தர் கூறுவதை ஏற்றுக்கொள்ள முடியுமென்றால், இவ்வுலக இயக்கம் என்பது, பலவகை இயக்கங்களின் ஒன்று சேர்ந்த கூட்டுநிலை என்றாகிறது. உண்மையும் அதுதானோ? வாசகர்களின் சொந்த நம்பிக்கைக்கு அந்த முடிவை விட்டுவிடுகிறேன்.

# 2. நலம் தரும் சொல்



பிரார்த்தனை செய்ய குறிப்பிட்ட நேரம் ஒதுக்குங்கள். குறிப்பிட்ட இடம் ஒதுக்குங்கள். ஏனெனில் இந்தப் பழக்கம் அந்த இடத்தையும் நேரத்தையும், கண்டவுடன் இயல்பாக நம்மை ஓர் 'ஈடுபடும் நிலைக்கு' பிரார்த்தனை நிலைக்கு எளிதாக அழைத்துச் செல்லும் என்று கூறுகிறார்கள்.

பிரார்த்தனையில் அடுத்த முக்கியமான பகுதி நம் வேண்டுகோளைத் திரும்பத் திரும்பச் சொல்வதாகும். திரும்பத் திரும்ப ஓர் எண்ணம் நினைக்கப்படும்போது, அது வலிமை பெறுகிறது. அதில் நம்பிக்கை பிறக்கிறது. நாளடைவில் நம்பிக்கை ஏறுகிறது. நம்பிக்கை ஏறிய எண்ணம்—வலுப்பெற்ற எண்ணம்—அதற்கான செயல்களை நிகழ்த்துவது எளிதாகிறது. திரும்பத் திரும்பச் செய்யும் செயல் பழக்கமாகிறது. நம்மால் நமது பழக்கத்தை விட முடிவதில்லை. பழக்கம் அவ்வளவு கஷ்டமாயிருக்கும்போது ஏன் நல்ல பழக்கத்தை நாம் மேற்கொள்ளக் கூடாது? திரும்பத் திரும்பக் கூறும் எண்ணம் மந்திரசக்தி பெறுகிறது என்று எழுதுகிறார்கள். எண்ணங்களிலிருந்து பலன்

பெற திரும்பத் திரும்ப (Repetition) என்பது ஓர் அற்புதமான உபாயம் என்று கூறுகிறார், மகத்தான தத்துவ ஞானி. எமலி கூ என்ற பிரெஞ்சு மனோ தத்துவ மேதையும் இந்த வழியைப் பின்பற்றியே பல நோயாளிகளின் நோய்களைக் குணம் ஆக்கினார்.

பாரதியாரைப்பற்றி நினைக்கும்போது ஏதோ அவர் 'ஓம் சக்தி' என்று கர்ஜிப்பதுபோல என் காதில் விழும். ஏனெனில் அவரது பாடல்களில் அதிகமாக, அழுத்தமாக அந்த ஓங்கார நாதத்தை எங்கு பார்த்தாலும் கேட்க முடிகிறது. ஒரு சமயம் கொஞ்சம் பயம் வந்தபோது, கொஞ்சம் தயக்கம் வந்தபோது, கொஞ்சம் சந்தேகம் வந்தபோது, 'ஓம் சக்தி' என்று பாரதியாருடன் சேர்ந்து குரல் கொடுத்தேன். உண்மையைச் சொன்னால் எங்கிருந்தோ என்னுள் ஒரு புது சக்தி—நம்பிக்கை—வேகம், தீரம்—பிறந்ததைக் கண்டேன். 'எங்கள் தந்தையர் நாடென்ற பேச்சினிலே ஒரு சக்தி பிறக்குது மூச்சினிலே' என்று பாடிய வீர கவி அல்லவா அவன்?

இதைப்பற்றி நான் தயக்கத்துடன் எனது நண்பர் பரஞ்சோதியிடம் கூறிக் கொண்டிருக்கும் போது பரஞ்சோதி கூறினார். "இதிலென்ன தயக்கம்? உங்களுக்குப் பலன் தந்தது என்றால் இது எல்லோருக்கும் பயன் தரும். உங்களுக்கு என் அனுபவத்தைச் சொல்ல வேண்டும். ஏதாவது துயரம் வரும்போது, துரதிர்ஷ்டம் நேரும்போது எதிர்பாராத இன்னல் வரும்போது நான் என்ன செய்வேன் தெரியுமா? ஒரு நாலு முறை 'சுற்றி நில்லாதே போ பகையே துள்ளி வருகுது வேல்' என்ற பாரதியாரின் பாடலைப் பாடு

வேன். அப்படியே வேல் சும்மா துள்ளி விளையாடி எதிரிகளை நொறுக்கித் தள்ளி நெருங்க முடியாதவாறு சிலம்பம் விளையாடுவதாகக் கற்பனை செய்வேன். அவ்வளவுதான். எல்லோரையும் அடித்து நொறுக்கி விட்டு மீண்டும் வேல் என்னிடம் வந்து சேரும். இன்னொரு விஷயம் உங்களுக்குச் சொல்லவேண்டும். 'சுற்றி நில்லாதே போ பகையே என்பதுடன், சுற்றி நில்லாதே போ துயரங்களே, சுற்றி நில்லாதே போ துரதிர்ஷ்டமே, கவலையே கெட்ட எண்ணமே' என்று நானாகக் கொஞ்சம் பாரதியாரின் பர்மிஷனுடன் அவர் கவிதையை நீட்டிக் கொள்வது உண்டு'' என்று கூறி விட்டு என்னைப் பார்த்தார், நண்பர் பரஞ்சோதி.

நான் அண்ணாந்து நோக்கினேன். பரஞ்சோதி பரஞ்சோதிதான்! பரஞ்சோதி கொடுத்த தெம்பில் என் விஷயத்தையும் அவர் விஷயத்தையும் உங்கள் முன் வைக்கிறேன். உபயோகித்துப் பாருங்கள்.

இதைத்தான் 'நலம் தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன்' என்று திருமங்கை ஆழ்வார் பாடுகிறாரோ? இதைத்தான் 'அல்லலெல்லாம் தீர எனக்கு ஆனந்தமாக ஒரு சொல்லை என்பால் வைத்ததை என் சொல்வேன் பராபரமே' என்று தாயுமானவரும் பாடுகிறாரோ?

உங்களுடைய நிலை வேறாயிருக்கலாம். நீங்கள் வேலை தேடிக் கொண்டிருக்கலாம். அட்மிஷனுக்காக அலைந்து கொண்டிருக்கலாம். நல்ல துணையை, செல்வத்தை, நோயற்ற வாழ்வை நாடிக் கொண்டிருக்கலாம். எதைத் தேடிக் கொண்டிருந்தாலும் பயப்படாமல் அந்தக் கொம்பு மீசைக்காரரிடம் போங்கள்— பாரதியைத்தான் சொல்லுகிறேன். அவருடைய

பாட்டை, வீரத்தை உங்களது தேவைக்கேற்ப சற்று மாற்றிக்கொண்டால் நிச்சயம் அவர் சண்டைக்கு வரமாட்டார்.

அமெரிக்காவில் அரசியல் மாநாட்டில் இருந்து ஒரு சாதாரண கூட்டம்வரை முதலில் பிரார்த்தனை செய்துவிட்டுத் துவங்குகிறார்கள். என்ன பிரார்த்திக்கிறார்கள் என்று நினைக்கிறீர்கள்? 'ஆண்டவனே! இங்கு நாட்டையும் எங்களையும் பாதிக்கும் முக்கியமான முடிவு எடுக்கக் கூடியிருக்கிறோம். சரியான புத்தியைக் கொடுத்து எங்களுக்கு வழி காட்டு' என்ற மாதிரியில் மதகுருமார்கள் பிரார்த்தனை கூறுகிறார்கள்.

வெளிநாட்டிலாகாவின் முன்னாள் காரியதரிசி டீன் ஏஸ்க் சிறுவராயிருந்தபோது அவருக்குத் தெரிந்த ஒரு நீதிபதி கூறுவாராம்: 'எல்லாம் கடவுளால்தான் ஆகக்கூடும் என்று பிரார்த்தி. பின் எல்லாம் உன்னால்தான் ஆகக்கூடும் என்று காரியத்தைச் செய்.'

# 3. ஒரு ஜீவ இசை



அந்த நலம் தரும் சொல் என்ன? அதை நீங்கள் கண்டு கொண்டீர்களா? நலம் தரும் சொல் மட்டுமல்ல, ஒரு நலம் தரும் புத்தகத்தை நான் கண்டு கொண்டேன். அதுதான் கையடக்கமான **தினசரி தியானம்** என்னும் புத்தகமாகும். திருப்பராய்த்துறை ராமகிருஷ்ண தபோவனத்தின் தலைவர் சித்பவானந்தர் இயற்றியது. ''நல்லெண்ணமும் நல்லுணர்வும் உள்ளத்துக்கு உணவு ஆகின்றன. தினசரி தியானம் ஆத்ம சாதனத்துக்கு உதவும்'' என்று எழுதுகிறார் சித்பவானந்தர். அதே போல ஆங்கிலத்தில் ஜேம்ஸ் ஆலன் என்பார் எழுதிய (As man thinketh) என்னும் புத்தகமும் நலம் சேர்க்கும் புத்தகமாகும். இதைத் தமிழில் வ.உ.சி. 'வலிமைக்கு மார்க்கம்' என்ற பெயரில் மொழிபெயர்த்திருக்கிறார். புத்தகங்கள் இல்லாமல் இல்லை. ஆனால், அதில் கூறியிருக்கும் அற்புதமான கருத்துக்களைத் தினமும் பயிற்சி செய்வதில்தான், செயலாக்குவதில்தான் வெற்றியின் ரகசியமே அடங்கியிருக்கிறது.

• • •

நியூயார்க் டைம்ஸ் பத்திரிகையின் நிருபர் சுல்ஸ்பர்கர், கடவுள் நம்பிக்கை இல்லாதவர். எனினும் கடந்த நாற்பது ஆண்டுகளாகப் பிரார்த்தனை பற்றிய அறிஞர்களின் அனுபவங்களையும், விளக்கங்களையும் தன் சொந்த வாழ்க்கைக்காகத் தொகுத்துக் கொண்டு வந்திருக்கிறார். சிகாகோ டிரிபியூனில் பிரார்த்தனை பற்றிய உள்ளத்தைத் தொடும் கட்டுரை ஒன்று எழுதி யிருக்கிறார்.

''பத்திரிகை நிருபன் என்ற முறையில் தலைவர் களிலிருந்து சாதாரண பிரஜைவரை, அரசிகளிட மிருந்து விபசாரிகள் வரை, முட்டாள்களிடமிருந்து ராஜதந்திரி வரை, மனித வாழ்க்கையைக் கணிப்பதே, கூர்ந்து நோக்குவதே என் தொழிலாக இருந்து வந்திருக்கிறது. அந்த நிலையில், மனித இனத்தின் அடிப்படை ஆசைகளும் வேண்டுகோள்களும் பிரார்த் தனை ரூபமாக வெளிப்படுவதை எந்த எழுத்தாளன் கவனிக்காமல் புறக்கணிக்க முடியும்?

துயரம் மேவும்போதோ, நன்மை தேவைப்படும் போதோ, அல்லது அந்த மகத்தான சக்தியில் இயக் கங்களைக் கண்டு தன் பாராட்டுக்களைத் தெரிவிக்கும் மூகமாகவோ, மனிதன் பயத்தினாலோ ஆசையினாலோ பிரார்த்தனை செய்கிறான். அவை மனிதனது சுய ஆறுதலுக்கு, மன நிம்மதிக்குப் பயன்படுகின்றன. மனிதன் உண்டாக்கியவற்றுள் பிரார்த்தனை ஓர் அற்புத சிருஷ்டி என்பேன்.

இவ்வுலகில் எத்தனையோ விஷயங்களை மனிதன் புரிந்து கொள்ள முடிவதில்லை. இதன் விளைவாகத் தோன்றும் மரியாதை, பிரார்த்தனை வடிவமெடுக்

கிறது. என்னைப் போன்ற ஒரு கடவுள் நம்பிக்கையில் லாதவன் பிரார்த்தனையைப் பற்றி ஒரு நாற்பதாண்டு காலமாக தகவல் சேகரித்து வருவது உங்களுக்கு விசித்திரமாகப் படலாம். எப்படி இருந்தாலும் தெய் விகத்தை வாழ்வில் உணர தெய்வ நம்பிக்கை வேண்டும் என்பதில்லை. வாழ்வின் ஒழுக்க நெறிகளைப் பாராட்டுவதற்கு மதம் தேவையில்லை. பிரார்த்தனை கள் மனிதனுடன் கூடப்பிறந்த உண்மைகள். அவை மனிதனின் சுய ஆத்மாவை உலகிற்குக் காட்டுகிறது.

கிறிஸ்து மதப் புரட்சியாளர், மார்ட்டின் லூதர் கூறுகிறார்: ''காலையிலும் மாலையிலும் செய்ய வேண்டிய முதல் வேலையாகப் பிரார்த்தனையை வைத்துக் கொள்வது நல்லது, 'எனக்கு இப்போது நேரமில்லை; ஒரு மணி கழித்து பிறகு செய்கிறேன்' என்று உன்னை நீ ஏமாற்றிக் கொள்ளாதே, அத்தகைய மனிதன் பிரார்த்தனையைவிடத் தனது தொழிலையும் வியாபாரத்தையும் முதலாவதாகக் கருதுகிறான். அதன் பிடிகளில பின்னால் சிக்குண்டு தவிக்கிறான்.''

மகத்தான ரஷ்ய எழுத்தாளர் டாஸ்டாவ்ஸ்கி வாழ்க்கையின் திறவுகோலாக அன்பைக் காண்கிறார். ''கடவுளின் படைப்பு அனைத்திடமும் அன்பு செலுத்துங்கள். ஒவ்வொரு மணலையும், ஒவ்வோர் இலையையும், ஒவ்வோர் ஒளிக்கீற்றையும் அன்புடன் நோக்குங்கள். விலங்குகளை — தாவரங்களை — ஒவ்வொன்றையும் நேசியுங்கள். அப்போது அதனுள் விளங்கும் கடவுள் தன்மை என்ற புதிர் உங்களுக்குப் புலனாகும். அது புரியும்போது நீங்கள் நாளும் வளர் வீர்கள். பின் உலகம் பூராவையும் நேசிப்பது உங்களுக்கு எளிதாகும். அப்போது இவ்வுலகை—இப்

பிரபஞ்சத்தை அன்பு ஒன்றுதான் பிணைத்திருக்கிறது என்பதை உணர்வீர்கள்.''

சாக்ரடீசின் மாணவர் கூறுகிறார்: ''ஆண்டவனே, என் ஆத்மாவை அழகுபடுத்து. எனது உள் உலகமும் புற உலகமும் ஒரே சுருதியில் இயங்கட்டும்.''

பிரார்த்தனை என்றால் என்ன என்பதை, தான் அறிந்த அனுபவத்தில் எழுதுகிறாள் ஒரு யூதச் சிறுமி. ஹிட்லரின் கொடுமைகட்கு ஆளாகிச் சிறையில் தனது கடைசி நாட்களைக் கழித்தபோது தன் டயரியில் அவள் எழுதியிருக்கிறாள்:

''பயப்படுபவர்களும், தனிமையில் வாடுபவர்களும் சந்தோஷமில்லாது துக்கத்தில் வாழ்க்கை நடத்துபவர்களும் தங்கள் கூட்டைவிட்டு வெளியே செல்ல வேண்டும். அந்த வெளி உலக அமைதியில் ஆண்டவனுடன், சுவர்க்கத்துடன், இயற்கையுடன் ஐக்கியமாவதை அவர்கள் உணர்வார்கள். எளிமையான இயற்கையின் அழகில் உலகை மகிழ்வுடன் வாழ்வதற்காகவே கடவுள் ஏற்படுத்தியிருக்கிறார் என்பதை அப்போது உணர்வார்கள்.

இயற்கையின் அழகில் தனிமையில் மனத்தைப் பறிகொடுத்து ஐக்கியமாகும் போது எந்தக் கஷ்டம் வந்த போதிலும் துக்கத்துக்கு ஆறுதல் கிடைக்கிறது.''

நாம் கண்டிராத ஒரு மாபெரும் சக்தியுடன் நாம் நம் எண்ணங்களைத் தெரிவிக்கும் மொழியே பிரார்த்தனை ஆகும். நமக்கு ஆழ்ந்த தேவை இருக்கும்போது நமக்கு வேறு ஒரு புகலும் இல்லாத போது

மனிதனின் உயிர்த்துடிப்பாகப் பிரார்த்தனை வெளிப்படுகிறது. அந்த ரீதியில், நாம் உயிருள்ள ஜீவன்களுடனும் உயிரற்ற பொருள்களுடனும் பிரார்த்தனை மூலம் நாம் பேசி உறவாட முடியும். அதையேதான் தாயுமானவர் கூறுகிறார்: ''எது பாவித்திடினும் அதுவாகி வந்தருள் செய் எந்தை நீ'' என்கிறார். எதைப் பாவிக்கிறோமோ அது போலவே அந்த ரூபத்தில் நமக்குப் பலன் கிடைக்கிறது. என்ன அற்புதமான மனோதத்துவ உண்மை! ஆனாலும் ''எல்லாம் அவனால்தான் முடியும் என்று பிரார்த்திக்க வேண்டும். அதே சமயம் எல்லாம் நம் செயலில்தான் இருக்கிறது என்று செயல்பட வேண்டும்'' என்ற பொன்மொழியை மறந்துவிடக் கூடாது.



# 4. வாழ்க்கை நெறி

தியானத்தைப் பற்றியும், மனத்தை ஒருமுகப் படுத்துவது பற்றியும், இப்பிரபஞ்ச பெருஞ்சக்தியுடன் மனத்தால் ஐக்கியமாவது பற்றியும் படிக்கும்போது பலர், "இது எனக்கு இப்போது தேவையில்லை, அந்திய காலத்திற்குத் தேவைப்படுகின்ற ஒன்று இது. மனிதன் வயோதிகத்தின் வாயிலில் உள்ளபோது ஏற்படுகிற பயம் இது; மனக் குழப்பம் இது; குற்ற உணர்வுகளின் பரிகாரச் செயல் இது'' என்று பலவாறு தீர்ப்புக் கூறுகின்றனர்.

உண்மை அதுவல்ல. இது அந்திய நாட்களுக்குத் தேவைப்படுகிற ஒன்றல்ல. மனத்தை ஒருமுகப் படுத்தும்—சமப்படுத்தும்—தியான மார்க்கங்களைப் பயிற்சி செய்தவன் மூலம் நாம் நமது பல பிரச்னை களுக்கும் வழி காணலாம். அன்றாட வாழ்வின் நெருக் கடிகளைச் சமாளிக்கலாம். நேர்மையும் அன்பும் கலந்த ஓர் ஒருமைப்பாடு நம் உள்ளே உலவுவதால், நம்

மிடையே ஒரு கற்புநெறி தோன்றுகிறது. நம்மால் முடியாத, நமக்கு மேற்பட்ட காரியங்களையும் இதனால் எளிதில் சாதிக்க முடிகிறது.

ஒருமையுடன் உறவு கொள்ளும் தியானப் பயிற்சி பற்றிப் படிக்கும்போது பலர், ஏதோ துறவியின் வாழ்க்கையையும் மனோபாவத்தையும் மேற் கொள் வதன் மூலமே இதை நிறைவேற்ற முடியும் என்று தவறாக எண்ணுகின்றனர். அதாவது மனப்பயிற்சி யையும் நல்லொழுக்கங்களையும், சிந்தனைகளையும், அன்றாட வாழ்வில் கடைப்பிடிக்க முயல்வதில் உள்ள கஷ்டங்கள் அவர்களுக்குப் புலப்படுகின்றன. இதனால் மனிதன் இருவேறு உலகத்து வாழ்க்கை நடத்துகிறான்.

கோயில், குளம், ஞானிகள், மதம், மதச்சடங்குகள் என்று வரும்போது அப்பியசிக்கும் ஒரு புனித மனோபாவம். அதை விட்டுவிட்டு அன்றாட வாழ்விற்கு வரும்போது அந்தப் புனிதத் தன்மையை அறவே விட்டுவிட்டு, 'இது நாயை நாய் தின்னும் உலகம். ஏமாற்று உலகம், வஞ்சக உலகம். அதற்கு ஏற்ப நான் சர்வ ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்' என்ற மாறுபட்ட மனோபாவம். கறைபடிந்த உலகம் என்று சொல்லிக்கொண்டு அதற்குத் தற்காப்பாக அவனும் கறைபடிந்த மனிதனாக, இறங்கிய நிலையில் வாழத் துவங்குகிறான்.

சொல்லும் செயலும் ஒன்றைப் பற்றி யொன்று செல்ல வேண்டும் என்கிறார் மகாத்மா காந்தி.

நமது புனித உள்ளம்—கோயிலில் உள்ளபோது எழும் தெய்வீக உணர்வு—எவ்வளவுக் கெவ்வளவு நமது அன்றாட நடைமுறை வாழ்வில் இறங்கிக் கலக்

கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு நமது வாழ்க்கை சமமடையும்; உறுதி பெறும். தெய்வீகம் நாள் பூராவும் நாம் செய்யும் ஒவ்வொரு செயலிலும், சொல்லும் ஒவ்வொரு சொல்லிலும் வெளிப்படும். அப்படி வாழ்க்கை நடத்துபவர்களேயே காந்தி என்கிறோம். அன்னை தெரிசா என்கிறோம். அத்தகைய காந்திகளும் தெரிசாக்களும் எத்தனையோ பேர் நம்மிடையே வாழ்கிறார்கள். புகழும் விளம்பரமும் இல்லாது அவர்கள் கிராமங்கள், நகரங்கள் என்று எங்கு பார்த்தாலும் நம்மிடையே வாழ்கிறார்கள். அத்தகைய மனிதர்களின் வாழ்க்கைத் தர்மங்களினால்தான் மழை பெய்கிறது. மனித வாழ்வு முன்னேற்றம் பெறுகிறது.

அத்தகைய வாழ்வைப்பற்றி எண்ணும்போது நம்மில் பலரும் ஓர் அப்பழுக்கில்லாத வாழ்க்கையைப் பற்றி எண்ணிக்கொண்டு, நமது வாழ்க்கையில் சிறு தவறு நேரும்போதெல்லாம் நம்மை நிந்தித்துக் கொள்கிறோம்; புண்படுத்திக் கொள்கிறோம். இது தேவையில்லாத ஒன்று.

மனிதன் நல்ல எண்ணத்துடன் முயல வேண்டும். செயல்பட வேண்டும். தவறுகளுக்காகக் கரைந்து கொண்டிருக்கக் கூடாது. தவற்றை உணர்ந்து அடுத்தமுறை செய்யாதவாறு தற்காப்பு கொள்ள வேண்டும். காந்தி எத்தனையோ தவறுகளைச் செய்தார். மகாத்மா காந்தி கூறுகிறார்: 'எனக்கு சமயத்தில் கோபம் வருகிறது. (கோபம் போல பல மனித குறைகளையும் இங்கே சேர்த்துக் கொள்ளுங்கள்) ஆனால் சதா என் குறைகளை உணர்ந்து குறைகளை மீறி வர முயல்கிறேன்.'' வாழ்க்கை ஒரு தொடர்ந்த பரிசோதனை; போராட்டம். ஒவ்வொரு சமயமும் நாம்

அச்சோதனையில் வெற்றி காண முயல வேண்டும். முதலில் பல முறை தவற நேரிடும். நாளாக ஆக, பின் தவறுகள் குறைந்து பல முறை வெற்றி காண வழி பிறக்கும். சோதனைகளில் அதிக முறை வெற்றி பெறும்போது அது நம்முடன் நமது பழக்கமாகத் தங்கி விடுகிறது.

எல்லாவற்றிற்கும் அடிப்படை மனப் பழக்கம் தான்.

நாம் நம்மீதே அதிகம் கருணை காட்டுவதில்லை; ஒவ்வொரு முறை தவறு செய்யும்போது நம்மைச் சித்திரவதை செய்து கொள்கிறோம். இந்த முறை தவறு நேர்ந்தது என்று நினைப்பதற்குப் பதில் நான் எடுக்கும் எல்லாக் காரியங்களுமே நடைபெறுவதில்லை என்று நம்மைப்பற்றி நாமே தீர்ப்புக் கூறிவிடுகிறோம். இதை நமது மனம் நம்பத் துவங்கி விடுகிறது. பிறகு அதுவே எப்போதும் தவறு செய்யும் போக்கிற்கு வழிகாட்டியாய் அமைந்துவிடுகிறது.

மகாத்மா காந்தி, அன்னை தெரிசா போன்றவர் களின் வாழ்க்கையைப்பற்றிப் படிக்கும்போது அவர் களும் நம்மைப் போன்ற மனிதர்கள்தான் என்பதை நாம் உணரவேண்டும். நடைமுறை வாழ்க்கையை எப்படி வாழ்ந்தார்கள் அவர்கள் என்பதை நுணுக்க மாக ஆராயும்போதுதான் நமக்குப் படிப்பினைகள் புலப்படும். என்ன அந்தப் படிப்பினைகள்?

அவர்களுக்கு மகத்தான லட்சியம் இருந்தது. அதற்கும் மேலாக அந்த லட்சியங்களை அடைய அவர் களிடை ஒரு வாழ்க்கை நெறி இருந்தது.

வாழ்க்கை நெறி இல்லாது எந்தப் பெரிய லட்சியத்தையும் நாம் அடைய முடியாது. அவர்களது வாழ்க்கை நெறி இவ்வுலக இயக்கத்தின் மாறா உண்மைகளிலிருந்து பெறப் பட்டவை. அந்த நெறிகள்:

(1) மனத்தை ஒருமைப்படுத்தும் பிரார்த்தனை. (2) உயிர்கள் எல்லாம் சமம், வாழ்க்கை புனிதமானது என்ற நம்பிக்கை. (3) வாழ்வின் பயன் பிறருக்குத் தொண்டுபுரிவதே—இவ்வுலகம் பரஸ்பர ஈடுபாட்டில் இயங்குகிறது என்ற உணர்வு.

அந்த வாழ்க்கை நெறிகளைக் கொஞ்சங் கொஞ்சமாக வாழ்வில் கடைப்பிடிக்க முயலும்போது நமது அன்றாட நடைமுறை வாழ்க்கையில் ஒளி வீசுகிறது; மணம் வீசுகிறது. தெய்விக வாழ்க்கையாக மாறுகிறது.



# 5. பிரார்த்தனையின் மனோதத்துவம்

"நான் தினமும் முன்னைவிட நல்லவனாக திறமை கொண்டவனாக ஆகி வருகிறேன். என் லட்சியங்கள் ஈடேறி வருகின்றன" என்று திரும்பத் திரும்பத் தினமும் கூறச் சொன்னார் எமிலி கூ என்ற பிரெஞ்சு மனோதத்துவ நிபுணர். இதே முறையைக் கையாண்டு பல நோயாளிகளைக் குணம் ஆக்கினார் எமிலி கூ. இதை நம்மை நாமே ஹிப்னாடைஸ் செய்து கொள்ளுதல் (**Auto Hypnosis**) என்று கூறுகிறார்கள் மனவியல் அறிஞர்கள். ஹிப்னாடிசம் இன்றும் மருத்துவர்களாலும், பல் டாக்டர்களாலும் அமெரிக்காவிலும் மேனாடுகளிலும் நோய்களைக் குணமாக்க உபயோகிக்கப்படுகிறது. ஹிப்னாடிசம் என்பது கிரேக்க மொழியில் தூக்கக் கடவுளின் பெயரைக் குறிப்பதாகும். நம்மை நாமே ஹிப்னாடைஸ் செய்து கொள்ளும்போது நாமும் அந்தத் தூக்க நிலைக்குப் போகிறோம். பிரார்த்தனையின் போது இப்படி நம்மை நாமே

ஹிப்னாடைஸ் செய்து கொள்கிறோம் என்று கூறுகிறார்கள், மனோதத்துவ நிபுணர்கள்.

ஹிப்னாடிசத்தின் போது மருத்துவர் கூறும் யோசனையை ஏற்கத் தயாராக உள்ள ஒரு மனநிலை யில் நமது அனுபவமும் துவங்குகிறது. அதேபோல கோயிலுக்குப் போகும்போதும் வீட்டில் கடவுள் படத் தின் முன் நிற்கும்போதும் ஒரு புனித தெய்விக உணர்வு நம்மை ஆட்கொள்கிறது. நம்மை நாம் ஒரு குறிப்பிட்ட பக்குவமான மனநிலைக்குத் தயார் செய்து கொள்கிறோம்.

கோயிலில் நிலவும் சூழ்நிலையும், அழகும், அமைப்பும் நம்மை ஈடுபடுத்தும் புறச் சின்னங்களாக உதவுகின்றன.

ஹிப்னாடிசத்தில் நம் ஆழ்மனத்திற்கு உத்தரவுகள் தரப்படுகின்றன. அப்போது மனம் நினைவு நிலையில் இல்லை. பிரார்த்தனையின்போது மனம் ஒருமுகப் பட்டுப் புறச்சூழ்நிலையை மறந்த வண்ணம் ஐக்கிய மாகிறது. அப்போது நமக்கு நாமே கூறிக் கொள்ளும் பிரார்த்தனைகள் ஆழ்மனத்திற்குச் சென்று பதி கின்றன.

நமது ஆழ்மனம் ஓர் அதிசயம் மிக்க கருவி; நமது ஆழ்மனத்தைக் கம்ப்யூட்டருக்கு ஒப்பிடுகிறார்கள்.

ஆழ்மனம் இரண்டு விதங்களில் செயல்படுகிறது. ஒன்று, எவ்வளவுக்கெவ்வளவு உணர்ச்சிபூர்வமாக நமது எண்ணங்களை, ஆசைகளை, வேண்டுகோள் களைச் சிந்திக்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு ஆழ மாக, வலிவாக அவை ஆழ்மனத்தில் பதிகின்றன. ஏன்

உணர்ச்சியுடன் நம் லட்சியங்களைப்பிரார்த்தனையின் போது கூற வேண்டும்? இதன் விடையை டாக்டர் பென்பீல்டு கூறுகிறார்: எண்ணங்கள் உணர்ச்சிகளாக ஆழ்மனத்தில் பதிவாகி இருக்கின்றன என்று. மூளை யின் சில பகுதிகளை மின் துருவத்தினால் தொட்ட போது மனிதன் பழைய சம்பவங்களை விவரிக்கத் துவங்கினான். அதுமட்டுமல்ல; அந்த உணர்ச்சியில் வாழத் துவங்கினான். எண்ணங்கள் மூளையிலுள்ள நியுரான் செல்களின் ஒரு குறிப்பிட்ட இணைப்பை ஏற்படுத்துகின்றன என்று மருத்துவ விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். ரசாயன விஞ்ஞானிகளோ நமது ஒவ்வொரு புது எண்ணமும் ஒரு புதிய புரதப்பொருளை மூளையில் ஏற்படுத்துகிறது என்றும், புரத மூலகம் மூலமாகவே எண்ணங்களுள், பழைய அனுபவங்களும் மூளையில் சேர்த்து வைக்கப்பட்டிருக்கின்றன என்றும் அபிப்பிராயப்படுகிறார்கள்.

உணர்ச்சிக்குள்ள சக்தி மகத்தானது. யாரை யாவது ஆழ்ந்த உணர்வுடன் நீங்கள் எண்ணும்போது அவர்கள் அந்த உணர்வை மறுபுறம் உணர்கிறார்கள் என்பது நிரூபிக்கப்படுகிறது. உணர்ச்சியுடன் ஆசைப் படும் நமது பிரார்த்தனை, ஆழ்மனம் என்ற மத்திய ஆய்வுக் கூடத்திற்குச் செல்கிறது. பின் அந்த ஆழ்மனம் அதை அங்கே பரிசீலித்துப் பிரச்னைக்கு வழி காண ஏற்பாடு செய்கிறது.

ஆழ்மனத்தின் இரண்டாவது அற்புத இயல்பு, பழக்கமாகும். நீங்கள் கூறும் எண்ணத்தின் உண்மை பொய்யைப்பற்றி அதற்கு அக்கறை இல்லை. ஆனால் எந்த எண்ணமும் திரும்பத் திரும்பக் கூறப்படும் போது ஆழ்மனத்தில் அணையா லட்சியமாக அது

மாறிவிடுகிறது. திடீரென்று தோன்றும் ஓர் எண்ணம், தீப்பொறி போன்றும் சட்டென்று மறைந்து விடுகிறது. ஆனால் திரும்பத் திரும்பச் சொல்லும் வேண்டுகோள் ஆழ்மனத்தில் வலுப்பெறுகிறது. வலுப்பெற வலுப்பெற, அது தானே இயக்கம் பெறு கிறது. நமது வேண்டுகோள்கள் புற உருவத்தில் நடைபெற உலகில் நிகழும் அதிசயம் தோன்றுகிறது.

பழக்கம் என்பது என்ன என்று வாசகர்களை ஆழ்ந்து சிந்திக்குமாறு கேட்டுக் கொள்கிறேன். ஏனெனில் நல்ல எண்ண முறைகள் ஒன்று நமக்குத் தெரியும்போது, அதை பழக்கமாக்கிக் கொண்டால் நமது வாழ்வில் வெற்றி எளிதாக அமையும். டைப் ரைட்டரை அடித்துப் பழக்கப்படுத்திக் கொண்டவன் ஒரு கடிதத்தை டைப் செய்யும் லாவகத்தைப் போல கார் ஓட்டப் பழகியவன் காரை ஓட்டும் லாவகத்தைப் போல இதுவும் (எண்ணும் விதமும்) நமக்குக் கைவந்த முறையாகிவிடும்.

பழக்கம் என்பது என்ன? ஒரு காரியத்தைத் திரும்பத் திரும்பச் செய்வதே பழக்கமாகும். பழகிய வுடன் அதை நிர்வகிப்பது கையாள்வது எளிதாகி விடுகிறது. எதுவும் முதலில் மன அளவில் திரும்பத் திரும்பக் கற்பனை செய்யப்படுகிறது. மன அளவில் நடிக்கப் பெறுகிறது. பின், நாம் நேரடியாகச் செய்யத் துவங்குவது எளிதாகிறது.

பிரார்த்தனையின் ரகசியமே, திரும்பத் திரும்ப, பலன் தரும் வரை, அதை மன அளவில் கற்பனை செய் வதில், மன அளவில் வாழ்ந்து பார்ப்பதில் அடங்கி

யிருக்கிறது. எதை நம் ஆசைகளாக, லட்சியங்களாக பிரார்த்தனைகளாகக் கொள்ள வேண்டும் என்பது உலக நியதிகளுக்கும் லட்சியத்தின் தன்மைகளுக்கும் கட்டுப்பட்டது.

பிரார்த்தித்து விட்டால் போதாது. நாம் நம் கண்களை அகல விரிய வைத்து சந்தர்ப்பங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்க வேண்டும். நமது லட்சியம் ஈடேற வாய்ப்புத் தரும் ஒவ்வொரு சம்பவத்திலும் துடியாயிருந்து நாம் செயல்பட வேண்டும்.

சொற்களுக்குப் பொருள் இருப்பது மட்டுமல்ல, அதன் பொருளுக்கேற்ற வலிமையும் அதற்குள் இருக்கிறது என்கிறார் மகாத்மா காந்தி. ஆகவே நல்ல சொல்லாகத் தேர்ந்தெடுங்கள். நல்ல லட்சியமாகத் தேர்ந்தெடுங்கள். பிரார்த்தனையின் மூலம் ஆழ்மனத்திற்கு அனுப்புங்கள். ஆழ்மனத்திற்கு இப்பிரபஞ்சத்துடன் எங்கோ தொடர்பிருக்கிறது. ஆகவே அது இம்முழுப் பிரபஞ்சத்தையும் துணைக்கழைத்து நம் பிரச்னைக்கு வழி வகுக்கிறது. நமக்கு உதவுகிறது. அதை ஏன் நாம் உபயோகித்துக் கொள்ளக் கூடாது?

# 6. பிரார்த்தனையின் செயல் வடிவம்



பிரார்த்தனைக்குச் செயல்வடிவம் கொடுக்க முடியுமா என்பது பலரும் ஆச்சரியப்படக்கூடும். பிரார்த்தனையே செயல்தானே என்று கூறக்கூடும். நமது யோக மார்க்கங்களில் பக்தி மார்க்கமும் கர்மயோகமும் இருப்பது போல, பிரார்த்தனையைப் பக்தி மார்க்கமாகவும், கர்மயோகத்தைச் செயல்வடிவம் கொண்ட பிரார்த்தனையாகவும் கருதலாம். ஓரிரு உதாரணங்கள் இதை விளக்கக் கூடும்.

நல்ல மத்தியான வெயில் தவித்துக் கொண்டிருக்கிறது. ஆற்றின் மணலைக் கடந்து தலையில் ஒரு குடத்துடன் ஒரு பெரியவர் நடந்து வருகிறார். கால்களில செருப்பில்லை. மணல் சூடு அள்ளுகிறது. திடீரெனப் பெரியவரின் மடி அவிழ்ந்து அதிலிருந்த காசுகள் கொட்டுகின்றன. குடத்தைக் கீழே எடுத்து வைத்துவிட்டுப் பெரியவர் மணலில் புதைந்து விட்ட காசுகளைத் தேடுகிறார். சாப்பிட்டவுடன் மத்தியான வெயிலைப் பொருட்படுத்தாது விளையாட ஓடிவந்த ஒரு சிறுவன், அந்தப் பெரியவரின் செயலைப் பார்க்கிறான். 'ஐயோ, பாவம் பெரியவர்!' என்று மணலில நின்று காசுகளைத் தேடி எடுத்துக் கொடுக்கிறான. உடலிலிருந்து வியர்வை வழிவதற்கு ஈடாகப் பெரிய

வரின் கண்களில் நன்றியும், மகிழ்ச்சியும், ஆசியும் பொங்குகிறது. "தம்பி! நீ நல்லவன்டா" என்று ஆசீர் வதிக்கிறார். சிறுவனின் இளமனத்தில இச்சம்பவம் ஆழமாகப் பதிந்து விடுகிறது.

இது ஒரு சிறு சம்பவம். பிரார்த்தனையில் நாம் நம் மனத்தால் ஈடுபடுத்திக் கொள்கிறோம். பிரார்த் தனையின் மறுபுறத்தில் அது அன்பாக, நன்றியாக, கருணை வெள்ளமாகப் பொங்கிப் பிரவகிக்கிறது. அந்தக் கருணையையே ஆசி என்றும் அருள் என்றும் கூறுகிறோம். பிரார்த்தனை செய்யத் தெரியாத ஒரு சிறுவன் பிரார்த்தனையின் செயல் வடிவம் கொடுத்து விட்டான். தன்னை மீறித் தன்னை அர்ப்பணிப்பது தான், பிரார்த்தனையின் செயல் வடிவம். செயலின் அளவை அல்லது தன்மையைப் பொறுத்ததல்ல பலன். செயலின் தூய்மையை, ஈடுபாட்டைப் பொறுத்தது அது.

நானும், எனது எழுத்தாள நண்பரும் மதுரை அழகர் கோயிலுக்கு ஒரு சமயம் சென்றோம். எங்கள் இருவரையும் அடையாளம் கண்டுகொண்ட கோயில் பெரியவர் அன்புடன் எங்களுடன் வந்து சுற்றிக் காண்பித்தார். கடைசியில் மூலவரைத் தரிசிக்கச் சென்றோம். "மாமா! பேப்பரில் எழுதுகிறார்களே, அவர்கள் இருவரும் வந்திருக்கிறார்கள்" என்று கூறி விட்டு இன்னும் சில விளக்கங்களை எங்களைப்பற்றிக் கூறினார் அவர். கோயிலின் கர்ப்பக்கிரகத்திற்குள் ளிருந்து பள்ளி கொண்ட பெருமாளே எழுந்து வருவது போன்று வயோதிகம் மிக்க பழுத்த பெரியவர் ஒருவர், அன்புடன் எங்களை நோக்கி வந்தார். "அப்படியா! நான் தவறாமல் படிக்கிறது, நல்ல விஷயங்கள். எங்கா

வது நல்லாயிருக்க வேணும்'' என்று எங்களை ஆசிர்வதிக்கிறார். எங்களுக்குப் புல்லரிக்கிறது. ஆண்டவன் சந்நிதியில் ஆண்டவனும்கூட இத்தனை நெருக்கமாக மனங்கலந்து உறவாடி இருக்க முடியுமா என்பது சந்தேகம்தான். ஆண்டவன் பல சமயங்களிலும் மனித உருவத்தில் அங்கங்கு வருகிறார் என்று நான் எண்ணிக் கொள்வதுண்டு.

''நாம் என்ன செய்துவிட்டோம் பெரிதாக?'' என்கிறார் எனது எழுத்தாள நண்பர். ''அப்படிச் சொல்லாதீர்கள். நீங்கள் எழுதுவது பலவிதங்களில் பலருடைய வாழ்க்கையைத் தொடுகிறது. உதவுகிறது. அது உங்களுக்குத் தெரியாது'' என்கிறார் எங்களுடன் கூடவந்த நண்பர். நல்ல காரியங்கள், பிறருக்கு உதவுகின்ற சம்பவங்கள், பல வழிகளிலும் நம்மை அறியாது, நாம் எதிர்பார்க்காதபோது, நமக்குத் தெரியாமல் நமக்கு உதவிக் கொண்டிருக்கின்றன.

ஓர் அழகான தாமரைக் குளம். அதற்கருகில் தென்னை ஓலையாலான ஒரு பந்தல். பந்தலுக்கு நடுவில் ஒரு கிணறு. கிணற்றுக்கப்பால் ஒரு பெரியவர்—கிழவர் நின்று கொண்டிருக்கிறார். மறுபுறமோ ஒரு முப்பது நாற்பது பேர் நின்றுகொண்டிருக்கிறார்கள். பெரியவர் பேசவில்லை. கண்கள் எங்கோ லயித்த வண்ணம் இருக்கின்றன. கூடியிருக்கிற மக்கள் அவரவர்களது குறைகளைக் கூறிவிட்டு நகருகின்றனர்.

அந்தப் பெரியவரை அந்தக் கூட்டத்தில் நீங்கள் பார்க்காமல் பொதுமக்களுடன் ஒருவராக ஒரு கடைத்

தெருவில் பார்த்திருந்தீர்களானால், யாரோ விஷயம் தெரியாத கிராமத்துக் கிழவர் என்று எண்ணிக் கொண்டு போயிருப்பீர்கள். ஆனாலும் அவர் தலை யசைக்குந்தோறும் ஏதோ நமது குறைகளை அவர் ஏற்றுக்கொண்டு விட்டதுபோல, உலவும் காற்றில் மிதந்து நிற்பது போல், ஓர் உணர்ச்சி ஏற்படுகிறது. அந்த அனுபவத்தை நம்முடன் ஏற்றுக்கொண்டு நாம் நகருகிறோம். பிரார்த்தனை வேண்டுகோளாய் நம்மிட மிருந்து புலப்படுகிறது. மறுபுறம் பிரார்த்தனை நாம் விரும்பும் காரியங்களை விளைவிக்க வேண்டிய சக்தி யாய் எங்கிருந்தோ கிளம்புகிறது. அதைத்தான் ஆண்டவனின் அருள் என்கிறோம், கருணை என் கிறோம், பெரியவர்களின் ஆசி என்கிறோம்.

பிரார்த்தனை செய்யாதபோது, நாம் பிரார்த்தனைக் குச் செயல்வடிவம் தரலாம். அருளையும் கருணையை யும் ஆசியையும் துவக்கிவிடும் ஒரு நல்ல காரியத்தைச் செய்யலாம். அந்த நல்ல காரியம்தான் பிரார்த்தனை யின் செயல் வடிவம், மனிதன் ‘தான்’ ‘எனக்கு’ என்பதற்கு அப்பால் போய் பிறருக்கு உதவுகிறானே, அப்போது பிரார்த்தனை செயல் வடிவம் பெறுகிறது. பலனை எதிர்பாராது செய்யும் ஒரு செயல், ஒரு சிறு. உதவி, ஒரு பாராட்டு பலவகைகளில் அன்பைத் தோற்று விக்கிறது. கருணையைத் தோற்றுவிக்கிறது. அந்தக் கருணையும் ஆசியும் நம்மைச் சூழ்ந்து நிற்கிறது. அப்போது எந்தக் கஷ்டமும் நம்மை ஏதும் செய்ய முடிவதில்லை. இல்லாதவர்களுக்கு உதவுங்கள். அது பணம் என்பதனால் மட்டுமே செய்யப்படும் உதவி அல்ல. பிறர் நலத்தில், பிறர் வாழ்வில், பிறர் மகிழ்ச்சி யில் நாம் காட்டும் அக்கறை ஒரு சிறு உதவியாக, நல்லெண்ணமாக முகிழக் கூடும்.

**'நிதி மிகுந்தவர் பொற்குவை தாரீர்**
**நிதி குறைந்தவர் காசுகள் நல்கீர்**
**அதுவுமற்றவர் வாய்ச்சொல் அருளீர்!'**

என்றார் பாரதி. காரணங்களின் மிக முக்கியமான லட்சியமே பிறருக்கு உதவுவதுதான். நமது இந்து மத மார்க்கங்களில் தியானமும், பிரார்த்தனையும் முக்கியம். பெரும் அளவுக்கு கிறிஸ்தவ மார்க்கத்தில் தொண்டு, உதவி, பிறருக்குப் பணி செய்தல் மிக முக்கியம் பெறுகிறது. தனக்கென வாழாது பிறர்க்கென வாழும் அன்னை தெரசா கிறிஸ்தவ மதத்தின் அற்புத உதாரணம். மகாத்மா காந்தியையும் அன்னை தெரசாவையும் 'கர்மயோகிகள்' என்று தத்துவ ஞானிகள் குறிப்பிடுகிறார்கள். அன்னை தெரசா பிரார்த்தனைகளுக்குச் செயல் வடிவம் கொடுத்திருக்கிறார். இதை நாம் நினைவில் கொள்வோமாக. நினைவில் கொண்டு செயல்படுவோமாக.

# 7. நம்மை நாமே மதிப்போம்



மனிதனது பெரிய குறைபாடு தன்னைத் தானே அறிந்து கொள்ளாததுதான். நம்மை நாமே மதிக்காததுதான். நம்மிடம் நாமே அன்பு செலுத்தாதது தான். ஒரு சிறு தவறு நேர்ந்துவிட்டால் அதற்காகப் பலர் ஏங்கிப் போகிறார்கள். ஒரு தவறு நேர்ந்துவிட்டால் அதற்காகத் தங்களைத் தாங்களே பலர் சவுக்கடி கொடுத்துக் கொள்கிறார்கள். அடிக்கடி அதையே எண்ணிப் பொருமுகிறார்கள். தாங்கள் ஏதோ வாழ லாயக்கில்லாதவர்களாகத் தங்களைப் பற்றித் தீர்ப்புக் கூறிவிடுகின்றனர். இதனால் நமக்கு நாமே தீமை செய்து கொள்கிறோம். உடல் அளவில் தீமை நேர்கிறது. உள்ள அளவில் விளையும் தீமை ஆயுள் பூராவும் நாவினால் சுட்ட வடு. வாய் நம்முடன் வாழ்கிறது. நமது நல்ல வாழ்வை நம் நினைவு, கறையாய் நின்று பாதிக்கிறது.

நம்மை நாம் மதிக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். நம்மை நாம் கண்ணியமாக நடத்தவும் நினைக்கவும் பழகிக் கொள்ள வேண்டும். நம்மை நாம் பெரு மனிதனாக மதிப்புக் கொடுத்து நடத்தக் கற்றுக்

கொள்ள வேண்டும். அப்போதுதான் பிறர் நம்மை மதிப்பார்கள். நம்மை நாம் எப்படி மதிப்புப் போட்டு வைத்திருக்கிறோமோ அப்படித்தான் உலகம் ஏற்றுக் கொள்ளுகிறது.

அஞ்சி, கூனிக் குறுகி நிற்கும் ஆளை வேலைக் காரனாகத்தான் நடத்துவார்கள், மாமனார் வீட்டிலும் கூட பயந்துகொண்டு, ஆசிரியர் கேள்வி கேட்பாரோ என்று அஞ்சி, கடைசி பெஞ்சில் உட்காரும் மாணவர் களை, "என்னருமை கடை மாணாக்கர்களே" என்று தான் ஆசிரியர் கூப்பிடுவார், நடத்துவார். "எனக்கு அதிகம் தெரியாது இதைப்பற்றி" என்று முன்னுரை கூறிவிட்டுத் தன் கருத்தைச் சொல்பவனின் சொல்லுக் குச் சபையோ, பிறரோ அதிகம் மதிப்புத் தரமாட் டார்கள். "நான் உடையைப் பற்றி லட்சியம் செய்வ தில்லை" என்று கூறிக்கொண்டு நடந்துகொண்டால் நமது உடை எந்தவித உணர்வைப் பிறர் மனத்தில், எழுப்புமோ அந்த மரியாதையுடன்தான் உலகம் நம்மை நடத்தும். நாம் நம்மை எப்படி ஏற்றுக் கொள்கிறோமோ அப்படித்தான் உலகம் ஏற்றுக் கொள்ளும்.

பிறரைத் திருப்தி செய்வதற்காகவோ, பிறர், வலுக்கட்டாயம் செய்கிறார்கள் என்பதனாலோ ஒரு காரியத்தைச் செய்ய முயலும் ஒருவனை, 'அவனை எதையும் செய்யச் சொல்லலாம்' என்றுதான் உலகம் நம்பும். குழந்தைகள் வயதாகிய பின்னும், தாய் குழந்தைகளின் துணியைத் துவைத்துப் போட்டுக் கொண்டிருந்தால், "ஏன் இன்று துணியைத் துவைக்க வில்லை?" என்று கோபப்படுவார்களே தவிர, "அடடா! அம்மா நமக்காகத் தினமும் துணி அல்லவா

தோய்த்துத் தருகிறாள்'' என்று நன்றி தெரிவிக்க மாட்டார்கள்.

ஆகவேதான் நாம் நம்மை எப்படி நடத்துகிறோம் என்பது மிக முக்கியமானது. நான் புத்திசாலி, திறமை சாலி, என்ற நினைவுடன் ஒரு சந்தர்ப்பத்தில் நடந்து கொண்டு அதற்குக் கிடைக்கும் வரவேற்பையும் 'எனக்கு அதிகம் தெரியாது' என்ற சந்தேகம் பயம் கலந்த நினைவுடன் ஒரு சந்தர்ப்பத்தில் நடந்து கொண்டு அதற்குக் கிடைக்கும் வரவேற்பையும் கற்பனை செய்து பாருங்கள்.

உண்மையில், நம்மில் பலர் நம்மையே தாழ்த்திக் கொண்டு வாழ்வது தெரியவரும்.

உடலும் அப்படித்தான். உடல் ஆத்மா தங்கி யிருக்கும் அற்புதமான கோயில். அதை எப்படிச் சரியாகக் கவனிக்காது உதாசீனம் செய்கிறோம். கண்டதை உள்ளே போட்டு அதைப் பாழ்படுத்து கிறோம் என்பது தெரியவரும். வெகு சிலரே உடலின் மேன்மையை அறிந்து அதைக் கண்ணியத்துடனும் மரியாதையுடனும் நடத்துகின்றனர். சரிவரக் கண் காணிப்பு இல்லாத உடல் நாளடைவில் அதன் பலனைத் தோற்றுவிக்கிறது.

அந்திய காலத்தில் ரமணர் உடல் நோய்வாய்ப் பட்டார். ஊரிலுள்ள சந்தேகவாதிகள் அவர்தான் யோகியாயிற்றே, முனிவராயிற்றே, எப்படி இதெல் லாம்—உடல் நோயெல்லாம் வரக்கூடும் என்று கேட் டார்கள். ரமணர் அவர்களுக்குப் பதில் சொல்லவில்லை; ஆனால் தன் உடலைப் பார்த்துக் கூறினார்: ''நீ என்ன செய்வாய்? உன்னை இளவயதில் பசி என்றும்

பட்டினி என்றும் எத்தனை சித்திரவதை செய்தேன்'' என்று அங்கலாய்த்தார்.

எதைப் போற்றுகிறோமோ அது வளரும். எதைத் தூற்றுகிறோமோ, உதாசீனம் செய்கிறோமோ அது தாழும். இது உலக உண்மை. அன்பு காட்டி வளர்க்கப்படும் குழந்தைகளுக்கும், தாயின் அன்பும் பரிவும் அரவணைப்பும் இல்லாது வளரும் குழந்தைக்கும் அதன் வளர்ச்சியில் விளைந்த மகத்தான மாறுபாட்டை — குறைபாட்டை விஞ்ஞானிகள் பரீட்சித்திருக்கின்றனர்.

அதே போலத்தான் உள்ளமும். உள்ளம் ஒரு சிறு சக்தி நிலையம். அதன் சக்தியை அதிகப்படுத்தலாம்; குறைக்கலாம். எல்லாம் நம் கையில் இருக்கிறது. நாம் உள்ளே போடும் எண்ணங்களின் தன்மையைப் பொறுத்து இருக்கிறது.

நான் சொல்ல விரும்புவது; பலர் பயம், சந்தேகம், என்னால் முடியாது, அவனைப் போல் நானில்லை என்ற பல எண்ணங்களால் உள்ளத்தைச் சின்னா பின்னப்படுத்தி வருகிறார்கள்; சித்திரவதை செய்து வருகிறார்கள். இதன் விளைவாக உள்ளம் அந்தச் சந்தேகங்களில் ஊறி ஊறி அதை நம்பத் தொடங்குகிறது. அதையே உண்மையாக்குகிறது. அவர்கள் போட்ட மதிப்பினால் அவர்களையே தாழ்த்தி விடுகிறது.

வாழ்வு என்பது ஏதோ வந்ததைப் பெற்றுக் கொள்வதல்ல. ஆற்றில் மிதக்கும் சிறு துரும்பின் கதியல்ல வாழ்வு. வாழ்வு நீரோட்டமல்ல. அது ஓர் எதிர் நீச்சல். வாழ்வு ஒரு போராட்டம். வாழ்வு ஒரு துடிப்பு. அடங்கி ஒடுங்கி அமிழ்ந்து போவதல்ல, வாழ்வு.

வாழ்வு, சுயதேவைக்கான அடிப்படைப் போராட்டம். உண்மைக்கான போராட்டம். அன்புக் கான போராட்டம். வாழ்வு செயலற்ற தன்மை அல்ல. நம்பிக்கை இழந்த மனிதன் செயலற்றுப் போகிறான். ஆனால் ஆகாயத்தைப் பார்க்கிறான்; பிற மனிதர் களின் முகத்தைப் பார்க்கிறான். இவர்களைப் பார்த்துத் தான் பாடுகிறார் பாரதியார், 'நெஞ்சு பொறுக்கு தில்லையே இந்த நிலைகெட்ட மனிதரை நினைத்து விட்டால், அஞ்சி அஞ்சிச் சாவார்; இவர் அஞ்சாத பொருளில்லை அவனியிலே' என்று.

உங்கள் உருவத்தைக் கற்பனை செய்து உங்கள் எதிரில் ஒரு கணம் அந்த உருவத்தை நிறுத்துங்கள். பின் சொல்லுங்கள்: "அந்த மனிதனை நான் அறிவேன். அவன் கண்ணியமிக்கவன். புத்திசாலி, திறமைசாலி. எடுத்த காரியத்தைச் சாதிக்காது விட மாட்டான். துடியான மனிதன், சளைக்காத மனிதன்!" அப்படி ஒரு மனிதன் இருந்தால் நாம் அவனை மதிப்போமா, மாட்டோமா? ஏன் அத்தகைய ஓர் அறிவும் திறமையும் அன்பும் வலிமையும் கொண்ட மனிதனாக நம்மை நாம் மதிக்கக் கூடாது? உருவகப் படுத்தக் கூடாது?

ஒரு சிறுவன் தன் வயோதிகத் தாத்தாவுடன் சர்க்கஸ் பார்க்கப் போனான். அங்கே ஒரு சின்ன மனிதன் ஒரு வளைந்த இரும்புக் கம்பியை வைத்துக் கொண்டு ஒரு பெரிய யானையைத் தன் இஷ்டப்படி பல காரியங்களைச் செய்யச் சொல்லிக் கொண்டிருந்தான். இதைக் கண்ட சிறுவன் தாத்தாவைப் பார்த்துக் கேட்டான்: "எப்படித் தாத்தா அந்தச் சின்ன மனிதன் அந்தப் பெரிய யானையை அப்படி ஆட்டுவிக்கிறான்?"

என்று. தாத்தா சொன்னார்: "பேரா! அந்த யானைக்குத் தன் முழு சக்தியின் வலிமையும் தெரிந்திருந்தால் இந்த ஊரையே நாசஞ் செய்திருக்கும்."

அதே போலத்தான் நம்மை நாம் அறிந்து கொள்ளாமல் வாழ்கிறோம். நமக்குள்ளே வலிமை இருக்கிறது. சக்தி இருக்கிறது. எல்லாவற்றிற்கும் வேண்டிய எல்லாம் இருக்கிறது.

# 8. தேவை மனோபாவ மாறுதல்



அறிஞர் அண்ணா அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் ஒரு சமயம் "ஏ தாழ்ந்த தமிழகமே!" என்று பேசினார். ஆம். நாம் நம் எண்ணங்களால் தாழ்ந்து விட்டோம். செயல்களினால் தாழ்ந்து விட்டோம். அதைப் போக்கத்தான் பழந்தமிழ் இலக்கியத்தி லிருந்து ஓயாது மேற்கோள் காட்டித் தமிழ் மக்களை விழிப்புறச் செய்தார். தமிழ்மொழியை, தமிழ் இலக்கியத்தை வளம் பெறச் செய்தார். அண்ணா இன்று இருந்திருந்தால், "ஏ! தன்னம்பிக்கையற்ற சமுதாயமே" என்று முழங்கியிருப்பார்.

எங்கு பார்த்தாலும் இல்லாமைக் கொடுமை. அவநம்பிக்கை! நெருக்கடியான வாழ்வு. ஏன் ஒரு சில மக்கள் அமெரிக்கா வந்து குடியேறியபோது அங்கே மாடமாளிகைகள் இல்லை. வெறும் காடும் விலங்கு களும் பழங்குடி மக்களான அமெரிக்க இந்தியர்களும் தான் இருந்தார்கள். ஆனால் குடிவந்த மக்களிடமோ

நம்பிக்கை இருந்தது. திறமை இருந்தது. சளைக்காத மனம் இருந்தது. விடாமுயற்சியிருந்தது. ஒரு புதிய நாட்டை, பொன்னும் மணியும் கொழிக்கும் நாட்டை பாலும் தேனும் ஓடும் நாட்டை உருவாக்கினார்கள். எல்லாம் மனத்திறம்தான். உழைப்பு, நம்மால் முடியும் என்ற எண்ணம், துணிந்து செயல்படும் திறமை, பிறரையும் நாட்டையும் குறை கூறாமல், 'நான் நாட்டுக்கு என்ன செய்வேன்; என் எதிர்காலத்திற்கு என்ன செய்யலாம்' என்று பாடுபட்டார்கள்.

நமது நாட்டில் மக்கள் மனோபாவத்தில் வந்திருக்க வேண்டிய புரட்சி கடந்த 29 ஆண்டுகளில் நிகழவில்லை. இப்போதுதான் ஏதோ புரட்சி தோன்றுகிறாற்போல் தோன்றுகிறது. மக்கள் மனோபாவத்தில் ஏற்படும் புரட்சி எளிதில் ஏற்படுவதில்லை. ஏனெனில் காலங் காலமாக மக்கள் சில நம்பிக்கைகளில் ஊறிப் போயிருக் கிறார்கள். உதாரணமாக, 'இது ஏழை நாடு' என்ற எண்ணம், 'என்ன பாடுபட்டாலும் இந்த நாட்டில் முன்னுக்கு வர முடியாது,' 'பதவியும் செல்வாக்கும் தான் காரியத்தைச் சாதிக்கும்,' 'அதிகாரத்திலிருப்ப வர்கள் என்ன தவறினை வேண்டுமானாலும் செய்ய லாம்,' 'நான் ஏன் எதிர்த்துப் பேச வேண்டும், எனக் கேன் வம்பு?' என்பன போன்ற எண்ணங்களில் ஊறி வளர்ந்திருக்கும் மக்கள், நியாயத்திலும் நேர்மையிலும் நியாயமான உழைப்பிலும், நம்பிக்கை இழந்தவர்களா கிறார்கள். பொதுவாக, இப்படி ஓர் அபிப்பிராயம் மக்களிடை பரவலாக இருக்கும்போது அதன் எதிர் காலம் இருளடைந்தது என்று மனோதத்துவ நிபுணர்கள் ஆராய்ந்து கண்டிருக்கிறார்கள்.

தனி மனிதனால் சமூகம் உருவாக்கப்படுவது எவ்வளவு உண்மையோ அதே அளவு சமூகத்தினால்

தனி மனிதன் தன் வாழ்வை நேர் செய்து கொள்வதும் உண்மையாகும். தவறு செய்யும் பெரிய அதிகாரி களும் தண்டிக்கப்படும்போது தனி மனித வாழ்வில் நேர்மையின் உயர்வு வெளிப்படுகிறது. மதிக்கப்படு கிறது. நேர்மையின் கட்டாயம் பிறக்கிறது.

மக்கள் மனோபாவத்தில் விளையும் புரட்சி நாட் பட்ட புரட்சி. தமிழ்நாட்டில் சமுதாயப் புரட்சியை ஏற்படுத்த கால் நூற்றாண்டுக்குமேல் ஆயிற்று பெரியாருக்கு. மக்கள் நம்பிக்கைகளை மாற்றிக் கொள் வது மெதுவான காரியம். சில சமயம் ஒரு புதிய தலை முறையே பிறந்து வளர வேண்டியிருக்கிறது.

அத்தகைய புரட்சியைத் தோற்றுவிப்பதில் தலை வர்களின் பங்கு அதிகம். ஆனால் மக்கள் மனோபாவத் தில் புரட்சி தேவை என்பதைப் புரிந்துகொள்ளும் தீர்க்க தரிசனம் தலைவர்களுக்குத் தேவை. அது இல்லாத தலைவர்கள் அன்றாட நிர்வாகத்தைக் கவனித்து நாளை ஓட்டும் சாதாரண அன்றாடங்காய்ச்சித் தலைவர்களாயிருப்பார்கள். பத்திரிகாசிரியர்களுடைய பொறுப்பு அதில் ஏராளம். ஏனெனில் திரும்பத் திரும்ப 'இது நல்லது, இது தவறு' என்று எழுத எழுத, மக்கள் மெதுவாக மாறுதலுக்கு உட்படுகிறார்கள். காசு மட்டும் குறியாகவோ அல்லது 'மக்கள் இதைத்தான் விரும்பு கிறார்கள், அதையே அளிப்பேன்' என்று கருதும் பத்திரிகாசிரியர்களோ நாட்டுக்கு நல்லது செய்வ தில்லை. அவர்களும் ஒரு விதத்தில் கற்பனை இல்லாத வர்கள்தான். நாட்டுத் தலைவனுக்கு நாட்டின்மீது அக்கறை இருக்க வேண்டியதுபோல பத்திரிகாசிரி யருக்கு, 'இது எனது நாடு' 'இவர்கள் என் மக்கள்' என்ற அதே ஈடுபாடு தேவை. அந்த உணர்வு இல்லாத

போது பத்திரிகை வெறும் வியாபாரமாகப் போகிறது. (சில துணிவு கொண்ட ஆசிரியர்கள் நம்மிடையே இருக்கிறார்கள். அவர்கள் அஞ்சா நெஞ்சத்திற்கு நாம் நன்றி சொல்ல வேண்டும்.)

அதேபோல பள்ளி ஆசிரியர்கள். அவர்கள் வெறும் சம்பளத்திற்கு வேலை பார்க்கும் மனிதர்களாக இருக்க லாம். அல்லது நாட்டின் எதிர்காலத் தலைவர்களை உருவாக்கும் சிருஷ்டிகர்த்தாக்களாக ஆலோசகர்களாக அவர்கள் சிறக்கலாம். அப்படிச் சிறகக அவர்களது சொந்த வாழ்க்கை, அவர்கள் புகட்டும் லட்சியங்களின் குணங்களின் உருவமாகத் திகழவேண்டும். அப்படி இல்லாதபோது குழந்தைகள் உள்ளத்தில் 'சொல் லொன்று செயலொன்று' என்ற கபட நாடக உலகமே கருத்தில் பதியும். ஆகவே மாணவர்களும் தங்களை அத்தகைய ஒரு கபட உலகிற்காகவே தயார் செய்து கொள்வார்கள். ஆகவேதான் எழுத்தறிவித்தவன் இறைவன் ஆவான் என்று எழுத்தறிவிப்பவனை உயர்த்திப் பேசுகிறது நமது சமுதாயம்.

அடுத்து, குடும்ப வாழ்க்கைக்கு வந்தால், பெற் றோர்கள் "என் பையனை நல்ல வேலையில் இழுத்து விடவேண்டும்" என்றும், "என் பெண்ணை நல்ல இடத்தில் கல்யாணம் செய்து கொடுத்துவிட வேண்டும்" என்றும் கவலைப்படுகிறார்களே ஒழிய, "நான் போன பின்னும் பையனும், தன் அறிவால் திறமையால் முன் னுக்கு வருவானா, அதற்கு நான் அவனைத் தயார் செய்திருக்கிறேனா?" என்று கவலைப்படுவதில்லை. மேனாடுகள் போல பையனையும் பெண்ணையும் தன் காலிலேயே நிற்க நாம் வழிவகை செய்வதில் அதிகக் கருத்து செலுத்தும் நாட்கள் அருகில் வந்து கொண்

டிருக்கின்றன. மேனாடுகளில் பொதுவாகப் பையன்களுக்கு வாழ்க்கை பூராவும் வேண்டிய தன்னம்பிக்கை தைரியம் பற்றிக் கவலைப்படுகிறார்கள். அதைப் பள்ளியிலும், வீட்டிலும் சொல்லிக் கொடுக்கிறார்கள். அதை வளர்க்கும் சந்தர்ப்பத்தை நிறையத் தருகிறார்கள். நாமோ அவன் வாழ்க்கை பூராவுக்கும் வேண்டிய பணத்தை விட்டுச் செல்வது பெற்றோரின் கடமை என்று எண்ணுகிறோம்.

எல்லாம் மனோபாவ மாறுதல்தான். நமது உலகில் மனோபாவ மாறுதல் நிகழத் துவங்கியிருக்கிறது. நாம் அதைத் துரிதப்படுத்தும் முயற்சிகளில் ஈடுபடுவது நமக்கும் நாட்டுக்கும் நல்லது.

ஒருசமயம் என்னை என் மகன் படிக்கும் ஐந்தாவது வகுப்பு மாணவர்களுக்கு இந்திய நாட்டுக் கலாசாரத்தைப் பற்றிக் கூறுமாறு கூறினார்கள். நான் பேசப் போகுமுன், அந்த வகுப்பு ஆசிரியர் என்னிடம் கூறினார்: ''எல்லாம் விஷயம் தெரிந்த பையன்கள்! சின்னப் பையன்கள் என்று எண்ணிப் பேசாதீர்கள். சமமாகக் கருதிப் பேசுங்கள்'' என்றார். அவரது உபதேசம் என்னைத் தூக்கிவாரிப் போட்டது. அதில் உள்ள மகத்தான உண்மை எனக்குப் பின்னால் விளங்கியது.

நமது ஊரிலோ ''குழந்தை, அவனுக்கென்ன தெரியும்?'' என்று கூறுவதைப் பெருமையாக நினைக்கிறோம். அப்படிக் கூறுவதனால் அவனைப் பாதுகாப்பதாய் நினைக்கிறோம். அப்படிக் கூறுவதன் மூலம் உண்மையிலேயே அவன் வளர்ச்சிக்குக் குறுக்கே நிற்கிறோம்.

தேவை : மனோபாவ மாறுதல்.

# இன்றிரவு தேவன் பிறக்கிறான்...

வானிலிருந்து மென்மஞ்சினை, தண்மையைக் குழைத்து, வெண்மையைச் சேர்த்து, அழகைக் கூட்டி வாரியிறைக்கிறான் தேவன். வானையும் பூமியையும் இணைக்கும், வைரச் சரங்களெனப் பனி கொட்டுகிறது. சூழ்ந்திருக்கும் கெட்ட காற்றையெல்லாம் பனி கரைத்துக் கொண்டாற்போல ஒரு சுத்தம் மேட்டையும் பள்ளத்தையும், கல்லையும், முள்ளையும், அழுக்கையும் தூசியையும் எல்லாம் மூடி எங்கும் வெள்ளைக் கம்பளம் விரித்தாற் போன்ற தூய பனி.

இரவு மணி பன்னிரண்டு. உலகம் அசாதாரண அமைதியில் ஆழ்ந்திருக்கிறது. அன்பு—ஊடுருவும் உறவாகக் காற்றில் பின்னிப் பிணைந்திருக்கிறது. மகிழ்ச்சி—கவிழ்ந்த வானம் போல நிறைந்திருக்கிறது. இளம் பெண்ணின் சிரிப்பைப் போல, நட்சத்திரங்கள் ஒளி சிந்துகின்றன.

வீடுகளெல்லாம், கடைகளெல்லாம், நகர் வீதிகளெல்லாம், பொது இடங்கள் எல்லாம் ஒளியூட்டும் விளக்குகள் களி ஊட்டுகின்றன.

இரவு மணி பன்னிரண்டைக் காட்ட, மாதா கோயில் மணி அடிக்கிறது. அதன் நாதம் இசையாகப் பரவுகிறது. இதயத்தில் ஒரு புதுத் துடிப்பை, உணர்ச்சியை, பரவசத்தை ஏற்படுத்துகிறது. மக்கள் பெரியவர்களும் குழந்தைகளும் குடும்பத் தலைவர்களும் பெண்களும் என அழகான உடைகளில் அமைதியாக சாரி சாரியாகச் செல்லுகின்றனர் மாதா கோயிலை நோக்கி.

இன்றென்ன அப்படி விசேஷம்? இந்த நள்ளிரவில் மக்கள் எங்கு போகிறார்கள்? காற்றினிலே அசாதாரண அமைதியும் அழகும் உறங்குவது என்ன விந்தை?

ஆம்! இன்று புண்ணியன் பிறந்த நாள். புனிதன் தோன்றிய நாள், நல்லவன் பிறந்த நாள்! ஆண்டவன் ஏசுகிறிஸ்துவாக திரு அவதாரம் செய்த நாள். இன்று கிறிஸ்துமஸ் திருவிழா. டிசம்பர் 25-ம் தேதி நள்ளிரவில் ஏசு பிறந்தார். ஆகவே விழா நள்ளிரவில் கொண்டாடப் படுகிறது.

ஊருக்கு நடுவே மாதா கோயில் நீண்டு நெடிதுயர்ந்து நிற்கிறது. அதன் உச்சியிலே ஒளிவிடும் சிலுவை. அதன் உள்ளேயோ தூய்மையான எண்ணங்களால், பெருந்தன்மையான சிந்தனைகளால் இடம் புனிதம் பெறுகிறது. மெல்ல அடி எடுத்து வைக்கிறார்கள். பண்டியிட்டு வணங்குகிறார்கள். வரிசையான இடங்களில் அமர்கிறார்கள். அவர்கள் நெஞ்சமும் ஆத்மாவும் ஏசுகிறிஸ்து என்ற உண்மையுடன், பேரொளியுடன், மாபெரும் சக்தியுடன் ஐக்கியமாகும் பணியில் ஈடுபட்டிருக்கிறது.

கறுப்பும் வெளுப்பும் அணிந்த கன்னிமாதர்கள் இனிய குரலில் அவன் புகழ் பாடுகிறார்கள். கூட்டமும் சேர்ந்து பாடுகிறது. மேடை மீதிருந்து சாம்பிராணிப் புகை—மனித எண்ணங்கள் அந்த இடத்தில் மேலே எழுவதைப் போல்—ஆகாயத்தை நோக்கிய வண்ணம் செல்கின்றன.

அதோ, கருணையின் வடிவமான பாதிரியார் தனது நீண்ட அங்கிகளுடன் வருகிறார். கூட்டம் வணக்கத்தால் எழுகிறது. மெழுகுவர்த்திகள் ஏற்றப்படுகின்றன.

ஏசு பிறந்த நாளைப் புகழ்ந்தும், ஏசுவின் வாழ்க்கையைப் புகழ்ந்தும் பாடுகிறார்கள்.



பாதிரியார் உபதேசிக்கிறார், "ஏசுவுக்கும் நமக்கும் என்ன உறவு" என்று. அவன் கையில் உங்களை ஒப்படையுங்கள் என்கிறார். உன்னைப் போல் உன் சகோதரனை நேசி என்கிறார். 'அவன் துணியைத் தொட்டவர்களெல்லாம் எப்படித் தூய்மைபெற்றார்கள்' என்கிறார். 'அவன் காட்டிய வழியில் செல்கிறோமா!' என்று கேட்கிறார்.

யாரோ நமது ஆசாபாசங்களையெல்லாம் அழுக்கு களையெல்லாம் எடுத்து அப்புறப்படுத்துவது போல் இருக்கிறது. பாதிரியார் பைபிளிலிருந்து ஒரு பகுதி யைப் படிக்கிறார். பலர் கண் மூடியிருக்கிறார்கள்; பலர் கண்களில் நீர் துளிர்த்திருக்கிறது.

"இதுதான் அவன் உடல்" என்று ஒரு வட்டமான ரொட்டித் துண்டைத் தூக்கி ஆகாயத்திற்குக் காட்டு கிறார் பாதிரியார். உயரேயிருந்து ஏசு கிறிஸ்துவே அந்தச் சிறு ரொட்டித் துண்டுக்குள் இறங்குவது போன்ற பிரமை ஏற்படுகிறது.

ஒரு கோப்பையில் திராட்சை சாறை ஊற்றி, "இதுதான் அவன் இரத்தம்" என்கிறார் பாதிரியார். ஆகாயத்தை நோக்கி, ஏசுகிறிஸ்து அதில் ஐக்கியமாகும் காட்சியை நம் மனக் கண்ணினால் பார்க்கிறோம்.

பாதிரியார் மண்டியிடுகிறார். விரலை நெற்றி யிலும் மார்பிலும் வைக்கிறார். பைபிளை முத்தமிடு கிறார்.

மக்கள் சாரி சாரியாக வருகிறார்கள், பாதிரியார் முன். "இதுதான் அவன் உடல்," "இதுதான் அவன் ரத்தம்" என்று கூறி, சிறு ரொட்டியையும், திராட்சைச் சாற்றையும் ஒவ்வொருவருக்கும் அளிக்கிறார்.

தெய்வீகம் பெற்ற உணர்வு பரவுகிறது உடலில். எங்கோ ஐக்கியமாகிவிட்ட மனநிலை.

"சற்று அமைதியாகத் தியானம் செய்யுங்கள்" என்கிறார் பாதிரியார். தியானம் நடைபெறுகிறது.

''உங்கள் உள்ளத்தில் அமைதியும் அன்பும் நில வட்டும்'' என்று ஆசிர்வதிக்கிறார். அங்கு உள்ள மக்கள் கும்பல் அனைத்தும் அப்படியே வாழ்த்துக் கூறி, ஒருவரை ஒருவர் அணைத்துக் கொள்கிறார்கள்; ஒருவருக்கொருவர் கை குலுக்குகிறார்கள்.

* * *

கிறிஸ்துமஸ் திருநாள் வருகிறதென்று ஒரு மாத முன்பாகவே மக்கள் எல்லாவற்றையும் தயார் செய்கிறார்கள். கிறிஸ்துமஸ் நாளை ஆவலுடன் எதிர் பார்க்கிறார்கள். எங்கெங்கெல்லாமோ இருக்கும் பிள்ளையும், பெண்ணும், அத்தையும், மாமாவும் கூடுமான வரை குடும்பமாக ஒன்று கூடுகிறார்கள். ஒருவருக்கு ஒருவர் தங்கள் அன்பைத் தெரிவிக்கும் வகையில் பரிசுகள் வாங்குகிறார்கள். அதை அழகாகக் கட்டு கிறார்கள். பின் அதை கிறிஸ்துமஸ் மரத்தடியில் வைத்து விடுகிறார்கள். பரிசின் மதிப்பு—விலை ஒரு பொருட்டல்ல. பரிசு அன்பைத் தெரிவிக்கும் ஒரு வகை, அவ்வளவுதான். கணவனுக்கு மனைவியும், அம்மாவுக்கு குழந்தையும் என்று பரஸ்பரம் பரிசு கொடுக்கிறார்கள். புதுச்சட்டை, பேனா, மிட்டாய் என்று எல்லாவற்றையும் பரிசாகக் கொடுக்கிறார்கள். சகஜமாக கிறிஸ்துமஸ் காலைவரை பரிசுகளை யாரும் பிரிப்பதில்லை. ஆகவே பெட்டிக்குள் என்ன இருக்கும் என்ற ஆர்வமும் ஆசையும் நிறைந்திருக்கிறது.

சவுக்குமரம் போன்ற சிறு பைன் மரத்தை வெட்டி, தாள் மலர்களாலும் ஒளி விளக்குகளாலும் அழகுபடுத்துகிறார்கள். வீடு பூராவும் வண்ண விளக்கு களால் அலங்காரம் செய்கிறார்கள்.

சில சமயம் சில வீடுகள் முன், ஏசுகிறிஸ்து வாழ்க்கைக் காட்சிகளைப் பொம்மைகளால் செய்து வைக்கிறார்கள்.

வீடுகளில் விதவிதமான பழங்களும், விதவிதமான பிஸ்கெட்டுகளும், புதிதாகச் செய்யப்பட்ட ரொட்டியும், காய்ந்த பழங்களால் செய்யப்பட்ட கேக்கும், விதவித மான கொட்டைகளும் பருப்புக்களும் மேஜையை அலங்கரிக்கின்றன. தெரிந்த நண்பர்கள், உறவினர்கள் வீட்டுக்கெல்லாம் பழங்களையும், பிஸ்கெட்டுகளையும் எடுத்துச் செல்கின்றனர்.

* * *

**ஜோ**சப்புக்கும், மேரிக்கும் ஒரு சத்திரத்தின் அருகிலுள்ள மாட்டுக் கொட்டைகையில் ஏசு பிறந்தார். அவர் பிறந்தபோது வானில் பெரியதோர் ஒளி நட்சத் திரமாய்த் தோன்றியது. உலகம் உய்ய உத்தமன் பிறந்தான் என்று அறிந்து கீழ்நாட்டு அறிஞர்கள் மூவர் ஒட்டகத்தில் அவரைக் காண வந்தார்கள். பிறகு குழந்தைக்குப் பரிசுகள் கொண்டு வந்தார்கள். அப்படித் தான் கிறிஸ்து சகாப்தம் தொடங்கியது. இன்று 1979 ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்த நிகழ்ச்சி அது. பல நாட்டின் சரித்திரங்கள் இதனால் மாறின. மக்கள் சமுதாயத்தின் எண்ணங்களையெல்லாம் ஏசு ஒரு நெறிப்படுத்தினார்; வழிகாட்டினார்.

**சா**ந்தாகிளாஸ் இல்லாத கிறிஸ்மஸ், நட்சத்திரம் இல்லாத வானம் போல்.

அன்பையும், சிரிப்பையும் உருவகப் படுத்தினால் தான் நமக்குப் புரிகிறது; நம்மால் அதை நன்கு உணர முடிகிறது. அந்த உருவம்தான் 'சாந்தாகிளாஸ்' தாத்தா. ஒரு காலத்தில் செயின்ட் நிக்கோலஸ் என்ற சாமியார் இருந்தாராம். அவருக்குக் குழந்தைகள்மீது அபார அன்பு. கிறிஸ்துமஸ் நாளின் போது குழந்தை களுக்கு மிட்டாய் கொடுப்பாராம். அந்த செயின்ட் நிக்கோலசே சாந்தாகிளாஸ் தாத்தாவாகி அவர் கொடுத்த மிட்டாய்களே இன்று பரிசுப் பொருள்களைப் பரிமாறிக் கொள்ளும் வழக்கமாய் உலவுகிறது.

சாந்தாகிளாஸ் வடதுருவத்தில் வசிப்பவர் என்றும், கலைமான் கட்டிய சறுக்குப் பனி வண்டியில் வருவாரென்றும், கிறிஸ்துமஸ் தினத்தன்று புகை போக்கி வழியாகப் பரிசுப் பொருள்களைக் கால்சாக்கில் திணித்துக் கொண்டு வருவதாகவும் குழந்தைகளுக்குக் கதை சொல்வார்கள். பெரியவர்களாகும் வரை குழந்தைகள் இதை நம்புவதைப் பார்க்கலாம்.



கிறிஸ்துமஸ் விழா முன் பெரிய கடைகளிலெல் லாம் சாந்தாகிளாஸ் தாத்தா வேஷம் போட்டுப் பலரை உட்கார வைத்திருப்பார்கள். சிறு குழந்தைகள்

தாத்தா மடியில் ஏறி உட்கார்ந்துகொண்டு கிறிஸ்து மஸிற்குத் தனக்கு என்ன பரிசு வேண்டுமெனக் காதோடு காதாய் ரகசியம் சொல்லும். 'சாந்தா'வும் அப்படியே கொண்டு வருகிறேன் என்பார். பின்னால் பக்கத்திலிருக்கும் பெற்றோரிடம் அதைச் சொல்லுவார்.

'சாந்தாவுக்குக் கடிதங்கள்' என்று சிலசமயம் ரேடியோ நிகழ்ச்சிகள் கிறிஸ்துமஸிற்கு முன்பாக நடைபெறும். குழந்தைகள் சாந்தாவிற்கு எழுதும் கடிதங்கள் விசித்திரமாக இருக்கும்; அதை ரேடியோ வில் படிப்பார்கள். அந்தக் குழந்தைகளுக்கெல்லாம் சாந்தாகிளாஸ் பெயர் போட்டுப் பதில் கடிதம் செல்லும்.

கிறிஸ்துமஸ் சமயத்தில் குழந்தைகளுக்கான பொம்மைகள் ஏராளமாக விற்பனை ஆகும். ரேடியோ விலும், டெலிவிஷனிலும் கிறிஸ்துமஸ் பாட்டுகளும், காட்சிகளும் நிறைய இடம் பெறும்.

இது அமெரிக்காவில் நிகழும் நிகழ்ச்சி. கிறிஸ்துமஸ் உலகெங்கும் கொண்டாடப்படுகிறது. ஒவ்வொரு நாட்டிலும், சில தனிச் சிறப்புகளுடன் கிறிஸ்துமஸ் கொண்டாடப்படுகிறது.

ஆஸ்திரியாவில் மூன்று மெழுகுவத்தியை ஏற்று வார்கள். முதல் மெழுகுவத்தியை முதல் நாளிரவும், மற்றொன்றை டிசம்பர் 25லும், மூன்றாவதை விழா முடியும் நாளான ஜனவரி முதல் தேதியும் ஏற்று வார்கள். நாம், "பொங்குக...பொங்குக. புதுப் பால் பொங்குக" என்பதுபோல, அவர்கள் மெழுகுவத்தி யைக் கொளுத்தும்போது "ஆண்டவனைப் புகழ்

வோம். ஏசு பிறந்தார். ஆண்டவனைப் புகழ்வோம்'' என்று கூவி மகிழ்வார்கள்.

பல்கேரியாவில் கிறிஸ்துமஸிற்கு முன் விரதம் இருப்பார்கள். கிறிஸ்துமஸ் அன்று அடுப்பு எரிக்க மரம் உள்ளே தூக்கி வர, எல்லோரும் அப்போது சோளத்தை அதன்மீது தூக்கி எறிவது வழக்கம். நாம் அரிசியை எறிந்து, திருமணத்தில் ஆசி கூறுவது போல் சோளத்தை எறிவது சுபிட்சத்தின் அறிகுறியாகக் கருதப்படுகிறது.

டென்மார்க்கில் அறுவடை செய்த தானியத்தைக் கொத்துக் கொத்தாக வாசற்படியிலும், மாட்டுக் கொட்டகைகளிலும் பறவைகளுக்காகக் கட்டி வைப்பது ஒரு கிறிஸ்துமஸ் வழக்கம்.

கிரீஸ் நாட்டில், நம் வீட்டில் புரோகிதர் தூய நீரைத் தெளித்துப் புனிதப்படுத்துவது போல, பாதிரியார் வீட்டிற்கு வந்து, புனித நீரைத் தெளிப்பது வழக்கம்.

நார்வே நாட்டில், நமது மாட்டுப் பொங்கல் போல மாடு கன்றுகளுக்கு அன்று சிறப்பாக உணவு அளித்து மகிழ்வார்களாம்.

போலந்து நாட்டில், விரதமிருந்துவிட்டு உண வருந்தும்போது ஏசுவிற்காக ஒரு தனி நாற்காலியை யாரும் உட்காராமல் வைத்திருப்பார்களாம், உணவு அருந்தும் மேஜையில்.

ஸ்வீடனில், கிறிஸ்துமஸ் அன்று, இறந்து போன முன்னோர்கள் மீண்டும் வீட்டுக்கு வருவதாக ஓர்

ஐதீகம். அதாவது வீடு, முன்னோர்களுக்குச் சொந்தம் போலவும், இப்போது குடியிருப்பவர்கள் ஏதோ வீட்டில் தங்கியிருப்பது போலவும் பாவனைகள் செய்வது அவர்கள் மரபு.

உயர்ந்த எண்ணங்களை உலகிற்குக் கொண்டு வந்த உத்தமனை எண்ணி, மனிதன் தனக்குத் தெரிந்த வழிகளால் எல்லாம் தன் அன்பை—நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறான் கிறிஸ்துமஸ் நன்னாளில்.

# அறிவுக்கு மேற்பட்ட அனுபவங்கள்

**ஆழ்மனம் என்பது என்ன? அது எப்படி இயங்குகிறது என்று யோசித்திருக்கிறீர்களா?**

மனத்தில் மூன்று நிலைகள் உள்ளன என்று கூறுகிறார்கள் அறிஞர்கள். தர்க்கவாத அறிவு—பகுத்தறிவு — காரண காரியம் காட்டும் அறிவு முதல்நிலை. அதாவது நாம் நடப்பது, எழுதுவது, ஓடுவது, சிந்திப்பது போன்ற செயல்கள் எல்லாம் நமது நினைவு அறிவிலிருந்து புறப்படுகின்றன. நாம் நடக்க விரும்புகிறோம், நடக்கிறோம். ஓட விரும்புகிறோம்; ஓடுகிறோம். எழுத விரும்புகிறோம்; எழுதுகிறோம். இவை, நமது நினைவு அறிவிலிருந்து (Concious mind) புறப்படும் செயல்கள்.

ஆனால் இதற்கு அடுத்த நிலையில் ஆழ்மனம் (Subconcious mind) இருக்கிறது. காரண காரியம் காட்டும் தர்க்கவாத அறிவு மயங்கிய நிலையில்—ஒரு இரண்டுங்கெட்டான் தூக்கக் கலக்கத்தில் — ஒரு ஹிப்னாடிஸ்ட் சில கட்டளைகளை இட்டு நம்மை அவர் இஷ்டப்படி கையைக் காலைத் தூக்கச் சொல்கிறார். ஆழ்மனம் அதை நிஜமென நம்பி அக்கட்டளையை

ஏற்கிறது. அதற்கேற்ப நம்மைச் செயல்பட வைக்கிறது. திரும்பத் திரும்ப எண்ணப்படும் எண்ணம் ஆழ்மனத்தில் புகுந்துவிடும். இப்படித்தான் நமது பிரார்த்தனைகள் பலன் தருகின்றன. ஆழ்மனத்தில் விடப்படும் எண்ணங்களை எப்படி யாவது நம்மைக் கொண்டே நிறைவேற்ற முயல்கிறது ஆழ்மனம். நாம் தர்க்கவாத அறிவை உபயோகித்துச் சிந்திக்காத போது — நாம் வேறு ஏதாவது தொழிலில் ஈடுபட்டிருக்கும் போது — திடீரென நமது பிரச்சனை களுக்கு முடிவு காட்டி 'ஐடியா'க்களை நம் மனத்தில் திடீரென்று உருவாக்குவதும் ஆழ்மனம்தான்.

கொடுக்கப்பட்ட கணக்கு விவரங்களை வைத்துக் கொண்டு கம்ப்யூட்டர் விடை கண்டுபிடிப்பது போல ஆழ்மனம் அங்கு விடப்படும் அனுபவங்கள் எண்ணங் களை வைத்து நமது பிரச்சனைகளுக்குத் திடீரென விடை காண்கிறது.

இதற்கடுத்த நிலையில் ஆழ்மனம் பிரபஞ்ச அறிவுடன் (Universal mind—Infinite intelligence) தொடர்பு கொண்டிருக்கிறதென்றும், இப்பிரஞ்சத் திலுள்ள எல்லா அறிவும் அங்கே எண்ண நிலையில் மிதக்கின்றன என்றும், ஆழ்மனம் சரியானபடி 'டியூன்' செய்யப்படும் போது இப்பிரபஞ்ச அறிவிலிருந்து நமக்கு விடையைக் கொண்டு வருகிறது என்றும் கூறுகிறார்கள்.

1971-ஆம் ஆண்டு மார்ச் மாதம். 'மார்ஷ்பீல்டு கிளினிக்' என்ற மருத்துவ நிலையத்தில் வயிற்றுப் புண்ணுக்காக எனக்கு அறுவை சிகிச்சை செய்

கிறார்கள். வயிற்றை அப்படியே திறந்து உள்ளிருக்கும் வயிற்றில் மூன்றில் ஒரு பங்கை எடுத்து விட்டு மூடி, தையல் போட்டிருக்கிறார்கள். வயிற்றில் போட்டிருக்கும் தையல்கள் பிடித்து இழுக்க வலி உயிர் போகிறது. இந்த அழகில் நர்சுகள் வந்து, "நன்றாக இருமுங்கள். அப்போதுதான் ஈரல் சரிவர இயங்கும்" என்று இருமச் சொல்கிறார்கள். இருமும்போது வயிறு குலுங்கி, சுருங்கி விரிவதால் உயிரே போகிறது. இப்படி மூன்று நாள் படாதபாடு பட்டேன். ஒரு நாள் அழுதே விட்டேன், வலிதாங்காமல். என் மனைவி வேண்டிக் கொண்டு விபூதியை மடித்து என் தலையணைக்கடியில் வைத்தாள். நான் சற்றுக் கண்ணயர்ந்தேன் அறையில் மங்கிய வெளிச்சம்.

திடீரென விழித்துக் கொண்டேன். 'என்ன வேண்டும்?' என்றாள் என் மனைவி. எனக்கு எதிரே இருந்த சுவரில் ஒளி வடிவத்தில் சிலுவை நின்றது. ஆடியது. "அதோ பார்! அதோ பார்!" என்று நான் சத்தம் போட்டேன். "சுவரில் சிலுவை தெரிகிறது பார்!" என்றேன். என் மனைவி "தெரியவில்லையே" என்றாள். சுமார் ஒரு நிமிட நேரம் இருக்கலாம். சிலுவை ஒளி எதிர்சுவரில் நின்றுவிட்டு மறைந்தது.

நானோ இந்து மதத்தவன்; மருத்துவமனை ஒரு கிறிஸ்துவ மருத்துவ இல்லம். சொன்னால் யாரும் நம்ப மாட்டார்கள்; அன்றிலிருந்து என் வலி எல்லாம் இருந்த இடம் தெரியாமல் போய்விட்டது!

ஆழ்மனம் ஒரு அடையாள மூலம் எனக்கு நம்பிக்கை காட்டியதா, அல்லது பிரபஞ்ச அறிவு ஒளி வடிவில் என் மன இயக்கம் மூலம் தோன்றியதா என்று

எண்ணி என்னிப் பார்க்கிறேன்... ஒன்று மட்டுமே நிச்சயம்.

பிரச்சனை நம்மை மீறிப் போகும் போது, "ஆண்டவனே!" என்று நாம் குரல் கொடுக்கும் போது, 'ஆதிமூலமே' என்று அழைத்த அதே அனுபவம்தான் நமக்கும் நேர்கிறது. இது சத்தியம்.

மற்றோர் சமயம், நானும் என் மகனும் தென்மாநிலங்களுக்கு வியாபார நிமித்தமாக 'வேனில்' சென்றிருந்தோம். என் மகன் காரின் மேல் ஹூடைத் தூக்கி வைத்துவிட்டு எண்ணெய். தண்ணீர் தேவையா எனச் சரி பார்த்துக் கொண்டிருந்தான். நான் எங்கோ நினைவாக ஹூட் சரியாக நிற்கிறதா என்று பார்ப்போம் என்று தொட அந்தக் கனமான ஹூட் என் கையின் கணுக்கட்டில் சடாரென்று விழுந்தது. நல்ல கூராக அரிவாள் போலிருந்த ஹூடின் முனை வெகு ஆழத்திற்கு வெட்டிக் கொண்டு உள்ளே போய் விட்டது. அது பதிந்திருந்த ஆழத்தையும் சதையின் பிளப்பையும் பார்த்த நான் மயக்கம் போட்டு விழுந்தேன். திடீரென்று என் நினைவில் என்ன எண்ணம் ஓடியது என்கிறீர்கள்? 'புத்தர் பிரானருள் பொங்கிய நாடு' என்று எப்போதோ நான் படித்த பாரதியார் கவிதை வரிகள் என் மனத்தில் திடீரென ஓட ஆரம்பித்தது; ஒலிக்க ஆரம்பித்தது; ஓடிக் கொண்டே யிருந்தது, என்னிச்சையில்லாமல்.

மருத்துவமனைக்கு என்னை, என் மகன் சித்தார்த்தன் அழைத்துச் சென்றான். டாக்டர் பார்த்தார். தையல் போட்டார். "வெட்டு ஆழமாகப்

போயிருக்கிறது. நரம்புகள் வெட்டப்பட்டிருக்கின்றன. ஆகவே உங்கள் கைவிரல்களில் இனிமேல் உணர்ச்சி இருக்காது!'' என்றார் டாக்டர்.

நான் அடைந்த வேதனை கொஞ்ச நஞ்சமல்ல. நானோ எழுதுபவன். உணர்ச்சி இல்லாத கைகளைக் கொண்டு?...கை எதற்கு இருக்கிறது என்று யோசித்துப் பார்த்தேன். பிறருக்குக் கொடுக்கவும், எழுதவும் இருக்கிறது. ஆகவே ''இனி கொடுக்க முடிந்ததைக் கொடு, எழுத முடிந்ததை எழுது'' என்று எனக்கு நானே சொல்லிக் கொண்டேன். எல்லாவற்றையும் விட, ஓடி வந்ததே மனத்தில் அந்தப் பாரதியின் கவிதைகள், அதைப்பற்றி யோசிக்கிறேன். அது எப்படி எங்கிருந்து வந்தது?

நம்ப மாட்டீர்கள். நான்கு வாரத்தில் கணுக்கையில் பெரிய வெட்டின் வடு இருந்தாலும் நான் இழந்திருந்த உணர்வுகள் ஒவ்வொரு விரலிலும் எனக்கு மீண்டும் வந்து விட்டது.

சமீபத்தில் வியாபார சம்பந்தமான ஓர் இக்கட்டான நெருக்கடியில் இருந்தேன். எங்களிடம் பொருளை வாங்கிக் கொண்டிருந்த பெரிய எண்ணெய் கம்பெனி திடீரென்று வாங்குவதை நிறுத்தினார்கள். அந்த எண்ணெய்க் கம்பெனி முக்கிய பெரிய 'கஸ்டமர்.' அவர்கள் நிறுத்தினால், கம்பெனிக்குக் கஷ்டமேற்படும். என்ன செய்வதென்று தெரியவில்லை இரண்டு நாட்கள்.

மூன்றாம் நாள் காலை கண் விழித்து எழுந்தபோது என் மனத்தில் திடீரென்று என் இச்சை இல்லாமல்

இரண்டு வார்த்தைகள் ஓயாமல் ஒலிக்க ஆரம்பித்தன. இது எனக்குப் புதிய அனுபவம். என்ன வார்த்தை என்கிறீர்கள்?

''நாராயண ஓம்! நாராயண ஓம்!'' என்ற வார்த்தைகள்! திரும்பத் திரும்ப இடைவிடாது ஓடிக் கொண்டே இருந்தன. நானோ சைவன்! விஷ்ணு வேண்டாதவரல்ல! எனினும், எங்கிருந்து இந்த வார்த்தைகள் என்னிடம் வந்தன என்று எனக்குப் புரியவில்லை.

ஒருசமயம் 'நலம் தரும் சொல்' என்ற தலைப்பில் நலந்தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன். ''நாராயணா எனும் நாமம்'' என்ற ஆழ்வாரின் பாடல் களை அனுபவித்து ஒரு கட்டுரையில் விளக்கி இருந்தேன். மற்றபடி ''நாராயண ஓம்!'' என்று ஒரு நாள்கூட நான் சொன்னதில்லை.

சொன்னால் நம்ப மாட்டீர்கள். அந்த எண்ணெய் கம்பெனியின் அதிபர் அன்று என்னைக் கூப்பிட் டனுப்பினார். சென்றேன். முன்னைவிட, ஒரு நிரந்தர மான 'காண்ட்ராக்ட்' மூலம் எங்கள் பொருளை வாங்கத் திட்டமிட்டிருப்பதாகக் கூறினார். என் கண்கள் பனித்தன.

'நாராயண ஓம்' இந்த நலம் தரும் சொல்—நம்பிக் கையின் அடையாளம்—எங்கிருந்து வந்தது. என் வாய் ஒலியாக—ஆழ்மனம் அபயம் காட்டியதா? பிரபஞ்ச அறிவு துணை நின்று என்னை பிரகலாதனாக்கியதா?

என்னருமை வாசகர்களே, நலந்தரும் சொற்களை நிறைய ஆழ்மனத்தில் போட்டு வையுங்கள். அது

எப்படி நமக்கு உதவும், வாழ்வு தரும், காக்கும் என்று நாம் விளக்கிச் சொல்லிவிட முடியாது.

ஒரு இந்து மதக்காரனுக்கு சிலுவையின் தோற்றமும், மற்றோர் சமயத்தில் 'புத்தர் பிரானருள்' பொங்கிய என்ற புத்தர் புகழ் பாடும் பாடலும்; ஒரு சைவனுக்கு—சிவ வழிபாடு செய்பவனுக்கு ''நாராயண ஓம்!' என்ற நலந்தரும் சொல்லான மகாவிஷ்ணு மந்திரமும் எப்படி வருகிறது என்பதை எண்ணி எண்ணிப் பார்க்கிறேன்...

மனம் எங்கோ நன்றியால் லயிக்கிறது. ஒன்று கிறது. அங்கே அன்பும், அறிவும் நன்மையும், கருணையும் பொங்கிப் பிரவகித்து நம்மை அணைக் கிறது; அறிவுக்கு மேற்பட்ட அனுபவங்கள்.

# மந்திரங்கள்

"விஞ்ஞான கண்டுபிடிப்புகள் எல்லாம் எப்படிச் செய்யப்படுகின்றன? இவையெல்லாம் திடீரென்று நிகழ்ந்து விடுவதில்லை. இதற்கு ஓர் சிந்தனை வழி முறை இருக்கிறது" என்று நான் நெடுநாள் யோசித்துக் கொண்டிருந்தேன். பின் பல விஞ்ஞானிகளின் வாழ்வை ஆராய்ந்தேன். மனம் பற்றிய மனோதத்துவ நூல் களைப் படித்தேன். இதன் விளைவாக, 'கற்பனை, ஆழ்மனம் காட்டும் வழி, எதிர்பார்ப்புகள்' என்ற இம்மூன்றிலிருந்துதான் ஆக்க சக்தி புதிய படைப்புக் களைத் தருகிறது என்பது புரிந்தது.

எழுத்தாளருக்கு நாவலையும், இசையாளருக்குப் புதிய மெட்டையும், தொழிலதிபருக்குப் புதிய வருவாய் வழிகளையும், விஞ்ஞானிகளுக்குப் புதிய கண்டு பிடிப்புக்களையும், நாட்டை ஆள்வோருக்குப் புதிய வழிமுறைகளையும் இது கொண்டு தருகிறது. எந்தத் துறையில் எதை நாம் விரும்புகிறோமோ அந்தத் துறை யில் நமக்கு ஆக்க சக்தி கிடைக்கிறது. இதுவே என் 'எண்ணங்கள்' என்ற நூலாக மலர்ந்தது.

திரு பரணீதரனுடைய 'அருணாசல மகிமை'யில் திருத்துறைப் பூண்டிச் சாமியாரைப்பற்றிப் படித்த

போதும், திருவண்ணாமலை ரமணர் ஆசிரமத்துக்கு நான் சென்ற போதும், பால்பிரண்டனின் இந்தியாவில் "ரகசியத்தைத் தேடுகிறேன்" (Secret Search in India) என்ற நூலைப் படித்த போதும், எங்காவது நல்ல ஞானிகளை, யோகிகளை, வழிகாட்டிகளைக் காண முடியுமா என்று உள்மனம் அவாவிக் கொண்டிருந்தது.

எத்தனையோ யோகிகள், மகான்கள் அமெரிக்கா வருகிறார்கள். டெலிவிஷனில் கூடப் பேட்டி தருகிறார்கள்; ஞான விளக்கங்களைத் தருகிறார்கள். எனினும் மனம் அதில் லயிப்பதில்லை, மரியாதை ஏற்பட்டாலும் கூட.



ரமணரும், அரவிந்தரும் எங்கோ இமயமலைச் சாரலில் ஞான ஒளி காட்டக்கூடிய ஒரு ஞானியும் என் மனத்தில் வந்து கொண்டிருந்தார்கள்; இருக்கிறார்கள்!

பல்கலைக் கழகங்களில் தராத என்ன அறிவை இவர்கள் தருவார்கள்?



ஞானம்.

வழி.

ஐக்கியமாகும் போது ஏற்படும் நிறைவு நிலை.

இதை அடையும் மார்க்கம்.

அதற்கான ஒரு மந்திரம்.

நம் ஆத்மாவைத் தட்டி எழுப்பி இப்பிரபஞ்ச பேரறிவுடன், ஒளியுடன் ஒன்றிவிடச் செய்யும் ஒரு சொல், ஒரு மந்திரம்.

இப்படி ஓர் ஆர்வத்தை ஆழ்மனத்தில் போட்டு வைத்தபோது ஜான் புளோபெல்டு (John Blofeld) என்ற அமெரிக்கர் எழுதிய "மந்திரங்கள், வலிமை தரும்

தெய்விகச் சொற்கள்'' என்ற புத்தகத்தைக் காண நேரிட்டது. திபேத்திய புத்த லாமாக்களிடம் பயின்றவர் இவர்.

நம் பகுத்தறிவின் மூலமும், அநுபவங்கள் மூலமும், பிரார்த்தனை எப்படிப் பலன் அளிக்கிறது என்ற சிந்தனைகளின் மூலமும் இப்பிரபஞ்சத்தின் இயல்புகள் என்ன என்பது பற்றியும் சிந்தித்துச் சிந்தித்து ஒரு பெரும்போக்கான அநுமானத்துக்கு வருகிறோம்; அப்போது மற்றொருவர் ஞானிகளுடன் நேரடி தொடர்பு கொண்டு, பயின்று பலன் பெற்றவர், தாம் கண்ட உண்மைகளை நம்முடன் பகிர்ந்து கொள்ளும் போது,

நமக்குத் தெளிவு ஏற்படுகிறது.

நம் அநுமானங்கள் வலிமை பெறுகின்றன.

வழிகாட்டியவர்களுக்கு நன்றி கூறுகிறோம்.

∴ ∴ ∴

மந்திரம் என்பது என்ன?

அது ஒரு சொல்; ஒரு நாதம்; ஓர் ஒலி, ஒரு நம்பிக்கை; ஒரு கற்பனை, நம்மையும் இப்பிரபஞ்சத்தையும் இணைக்கும் ஒரு சூட்சுமம்.

இந்து மதத்தில் மட்டுந்தான் இம்மந்திரங்கள் இருக்கின்றனவா என்று இதைப் படிக்கும் என் பிற மதத்து நண்பர்கள் கேட்கக் கூடும்.

இல்லை.

ஒவ்வொரு மதத்திலும் இம்மந்திரங்கள் உச்சரிக்கப் படுகின்றன.

**மதங்களில்—மந்திரம்**

இந்து மதத்தில் ஓம் என்ற நாதம். பிரணவ ஒலி. இப்பிரபஞ்சத்துக்கு ஒரு துடிப்பு இருக்குமானால் அந்தத் துடிப்பு நாம் "ஓம்; ஓம் ஓம்" என்று சொல்லும்போது எழும் துடிப்போடு இயைந்து நம்மை இப்பிரபஞ்சப் பேரொளியுடன் இணைக்கிறது. சொல்லிப் பாருங்கள்.

கிறிஸ்துவ மதத்தில் இதையே "ஆமென்" என்று நீட்டி இசைத்துக் கூறுகிறார்கள்.

"ஏற்றுக் கொள்கிறேன்!" "இதுவே என் ஆசை!" என்பது இதன் பொருள். 'ஆமென்' என்ற சொல்லுக்கும் ஓம் என்ற ஒலிக்கும் உள்ள தொடர்பினைக் கவனியுங்கள். அத்துடன் "அல்லலூரயா!" என்று கிறிஸ்தவர்கள் பாடுகிறார்கள், 'உன்னைப் போற்று கிறேன்' என்ற பொருள்பட.

இந்து மதத்திலுள்ள போற்றிப் பதிகங்களை "வல்லவனே போற்றி! பூசிப்போர்க்கு எளியவனே போற்றி!" என்று பாடும் பூசனைப் பாடல்களை நினைவு கூறுங்கள். பூஜை செய்பவர்களைக் கேரளத் தில் "போத்தி" என்று பெயரிட்டு அழைக்கிறார்கள்.

புத்த மதத்தில் எல்லா இடர்களும் நீங்கி, எல்லா நலன்களும் பெருக "மணி பத்மே ஹும்!" என்ற

மந்திரங்களைப் புத்த மதத்தினரும், பிட்சுக்களும் ஜெபிக்கிறார்கள். மணி பத்மே என்றால் "தாமரைப் பூவினில் வீற்றிருக்கும் மணியே ஆபரணமே" என்று பொருள். 'ஹம்' எனபதன் தாத்பரியம், "எல்லையற்ற



பிரபஞ்சத்துடன் இந்த ஆத்மாவை இணைக்கிறேன்" என்பதைக் கூறும் ஓர் ஒலி. "ஞானமும் கருணையும் பொங்கிப் பிரவகிக்கும் புத்தபிரானின் இதயமே, உன்னை ஆராதிக்கிறேன்" என்பதுதான் கரு.

இஸ்லாமியர்கள் தொழுகை நடத்துவதைப் பார்த்திருப்பீர்கள். அங்கே வெட்டவெளி. கைகளை மேலே தூக்குகிறார்கள். மண்டியிட்டு ஓர் ஒலியை, ஒரு நாதத்தை மணிக்கணக்கில் எழுப்புகிறார்கள். தூய்மை தரும் நாதம்.

நம்மை எங்கோ ஐக்கியப்படுத்தும் பேரொலி.

குரான் ஓதுகிறார்கள். தொழுகை நடத்துகிறார்கள்.

ஒரு நாமம் ஒருருவம் இல்லார்க்கு ஏன் ஆயிரம் திருநாமம் பாடிப் பூஜிக்கிறார்கள்? இதற்குப் பதிலாக ஒரு ஞானி கூறுகிறார்;

''ஆண்டவனே! உனக்கு
ஒரு நாமம் கிடையாது
உன்னை பல நாமங்கொண்டு
ஜெபிக்கிறேன்
உனக்கு ஓர் உருவம் கிடையாது
உன்னை இந்த உருவ வழிபாட்டில்
காண முயல்கிறேன்
உனக்கு ஓர் இடம்,
என்று ஏதும்கிடையாது நீ சர்வ வியாபி
நான் இந்த இடத்தில் (கோயிலில்)
உன்னைக் காண முயல்கிறேன்
இதை எல்லாம்
மன்னித்தருள்வாயாக
ஏனெனில் இவை
எனது மனித குறைபாடுகள்.''

மனித வரம்புகளை உணர்ந்து அதை மீற முயலும் அந்த ஞானியின் வாசகங்களைச் சில முறை படியுங்கள். ஓர் எளிமையும் ஈடுபாடும் பிறக்கும்.

"ஆண்டவன் எங்கும் இருக்கிறான். அவனை மனத்தால் வழிபட்டால் போதா? எதற்கு மந்திரம், ஜெபம், பூஜை புனஸகாரம்?'' என்றெல்லாம் நீங்கள் கேட்கக் கூடும.

செய்யலாம். மனத்தை ஒருமுகப்படுத்துவதற்கும் நாம் பெறும் அநுபவத்தைச் சுலபமாக அடைவதற்கும் ஒரு வழிமுறை இருக்கிறது.

அதுதான் மந்திரம்.

**மந்திரம் — ஒரு ரகசியம்**

மந்திரம் ஒரு சொல். ஒரு நாதம். இத்தனைக் காலமும் இது வழி வழியாக குரு - சிஷ்ய பரம்பரையாக வருகிறது. சீடனின்-சாதகனின் வளர்ச்சியையும், மனப் பக்குவத்தையும், தேவையையும் அறிந்து குரு சரியான சமயத்தில் சீடனுக்கு மந்திரங்களை அருள்கிறார். காதில் ஓதுகிறார்.

இது ரகசியமாகக் காப்பாற்றப்பட வேண்டும். யாரிடமும் கூறக் கூடாது என்ற சத்தியக் கட்டுப்பாடு இருக்கிறது. எண்ணங்கள் மனத்தில் தேக்கி வைக்கப் படும் போதுதான் அதில் ஆழம் இருக்கிறது. வளமை ஏற்படுகிறது என்ற நோக்கில் பிறந்த உயர்ந்த கருத்துதான் ரகசியம்.

எப்போது இதை எளிதாக வெளியில சொல்ல ஆரம்பிக்கிறார்களோ அப்போது இதன் சக்தி சிதறிப் போய் விடுகிறது என்பதை அநுபவம் காட்டுகிறது.

நமது குரு-ஞானகுரு. நமக்குத் தீட்சை தருகிறார். இது ஓர் அநுபவம். "ஆயிரங் கேள்விகளை ஆண்ட வனைப் பற்றிக் கேட்டேன்" என்று வந்த விவேகாநந்



தரை ராமகிருஷ்ண பரமஹம்சர் அன்பு மேலீட்டால் அணைத்துக் கொள்கிறார். விவேகாநந்தருக்கு அந்த அணைப்பு ஓர் அநுபவமாய் அமைகிறது. "என்னிடம் கேள்விகள் இல்லை. ஏதும் தெரிந்து கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. எல்லாம் புரிந்து விட்டது" என்கிறார் விவேகாநந்தர்.

அந்த அநுபவம், குரு-சிஷ்ய தீட்சையில் கிடைக் கிறது. காரணம் கூறுகிறார்கள் அறிஞர்கள். "குரு தந்த மந்திரம் காலங்காலமாக, குரு சிஷ்ய பரம்பரையில் வந்த ஒரு சொல். ஆகவே அத்தனை பேர் ஜெபமேற்றிய வலிமை அதில் இருக்கிறது. இது விலை மதிப்பிற்கரிய பெரு ஞானம்."

மந்திரத்தில் சொல் இருக்கிறது. "சொல் தேவையா?" என்று நீங்கள் கேட்கலாம். நன்றாக



யோசித்துப் பாருங்கள். சொற்களுக்குப் பொருள் இருக்கிறது; சொற்களுக்கு நாதம்-ஒலி இருக்கிறது.

## மந்திரத்தின் அர்த்தம்

அன்பு, கருணை, காதல், வலிமை, அறிவு, அழகு, மகிழ்ச்சி என்பன எல்லாம் வார்த்தைகள் தாம். மகிழ்ச்சி எனும் சொல்லே மகிழ்ச்சி தருகிறது. அதை நாம் அழுதுகொண்டு சொல்வதில்லை. அழகு என்னும் போது அந்த அழகு நம் நெஞ்சை நிறைக்கிறது. அன்பு என்னும்போது நம்மிடமிருந்து பிரவகிக்கும் ஓர் ஈடுபாடு நமக்கு வேண்டியவர்களுடன் நம்மைப் பிணைக்கிறது.

ஆகவே தான் ஆண்டவனை, தூயவனே போற்றி, வல்லவனே போற்றி என்று வலிமை தரும் நலம் பயக்கும் சொற்களால் வணங்குகிறோம். நாம் சொல்லும் போது நமக்கேற்படும் அநுபவம்தான் நமக்கு அந்தச் சொல்லின் பொருளை நம்முள் ஏற்றுகிறது.

மாறாக, "துன்பமே வருக! தொல்லையே நிகழ்க!" என்று நாம் அர்ச்சிப்பதில்லை. 'கால் கை சோர்ந்து விழலானேன்!' என்று ஒரு பிரபல பாடலைக் பாடிக் கொண்டிருந்த அமெரிக்கப் பாடகி பாடலின் பின் ஒரு இரண்டு நாள் மிகவும் தளர்ந்து போய் விடுவாராம். சீன மொழியில் நான்கு என்ற சொல் சாவு என்ற பொருளைத் தருவதால் சீனர்கள் நான்கு என்ற வார்த்தையை மறைமுகமாகத்தான் குறிப்பிடுவார்களாம்.

சொல்லுக்கு அதன் பொருளின் வலிமை உண்டு என்பதையே இவை நிரூபிக்கின்றன. ஆகவேதான் நம் குழந்தைகளுக்குப் பெயர் வைக்கும் போது சர்வ ஜாக்கிரதையாக வைக்க வேண்டும். பெயரில் இருக்கும் பொருள், சொல்ல சொல்ல வலிமை ஏறி அதுவே நமது குண இயல்பாக மாறிவிடும். இதை கவனம் வைக்க வேண்டும். வேம்பு என்ற பெயருக்கும், விக்கிரமன் என்ற பெயருக்கும் உள்ள வேறுபாட்டைக் கவனியுங்கள். மேலும் அறிஞர்கள் கூறுகிறார்கள். காலங்காலமாக உபயோகிக்கப்பட்டு வரும் வார்த்தைகளில் மனித நம்பிக்கையானது அந்தப் பொருளின் அர்த்தத்தின் வலிமையை ஏற்றி இருக்கிறது. இது முக்கியமான விஷயம். கவனத்தில் வைக்க வேண்டிய விஷயம்.

அடுத்தது நாதம்.

## மந்திர ஒலி

பல்வேறு மந்திரங்களிலும் பார்த்தீர்களானால் மெல்லினமும், இடையினமும்தான் கலந்திருக்கும். வல்லினம் அதிகம் வராது. ''நமோ, நாராயண'', ''ஓம் நமச்சிவாய'' ''ஆமென்'' ''அல்லலூயா!'' ''மணி பத்மே ஹம்.''—இப்படி.

ஒலி என்று சொல்வதைவிட, இந்தக் காரணத்தைக் கொண்டே, நாதம் என்று சொல்வதை நான் விரும்பு கிறேன். நாதம் என்ற சொல்லில் ஒரு மிருதங்கம் தட்டப்பட்ட பின்னும் தொடரும் ஓர் சப்தம் தொடர் கிறார் போல் ஓர் உணர்வு.

இந்த நாதம் ஒரு குறிப்பிட்ட ஒலி அலை கொண்டது (Frequency). இப்பிரபஞ்ச இயக்கத்தின் அடிப்படைத் துடிப்பும் ஒலி அலையும் இந்த மந்திரங் களின் ஒலி அலையும். ஒத்த இயல்புடையது. ஆகவே தான் ரேடியோவில் நாம் ஒரு குறிப்பிட்ட மீடடரில் (Frequency) நாம் விரும்பும் நிலைய ஒலிபரப்பைக் கேட்பது போல, இந்த நாதத்தை அங்கே கேட்கச் செய்கிறோம் என்கிறார்கள்.

விஞ்ஞான உலகம் இதை இன்னும் அறுதியிட்டு ஏதும் கூறிவிடவில்லை. வாழ்வில் எல்லா விஷயங் களும் ஆதார பூர்வம் கிடைக்கும்வரை நாம் காத்திருக்க முடியாது. ஏனெனில் அதற்குள் நம் வாழ்நாள் கழிந் திருக்கும். அறிவுக்கும் அநுபவத்துக்கும் ஏற்றதை நாம் பயன்படுத்திப் பலன் காணவேண்டும். அதுதான் வாழ்க்கை.

சொல், பொருள், நாதம்—இவை எப்படி இயங்கு கின்றன?

## மந்திரம் எழுப்பும் கற்பனை

இவை சாதகனின் மனத்தில் ஏற்படுத்தும் கற்பனையில்தான் எல்லாமே துவங்குகின்றன என்று கூறுகிறார்கள் ஞானிகள். மந்திரத்துக்கு ஓர் உருவம் உண்டு; ஒரு நாதம் உண்டு; ஒரு நிறம் உண்டு. அதை நாம் மனத்தில் விரியவிடும் போது—அதில் நமக்கு ஆழமான நம்பிக்கை இருக்கும்போது—அதிசயங்கள் நிகழ்கின்றன. புத்த மதத்தில் 'இட்சிணி' என்ற ஓர் இஷ்ட தெய்வத்தை உருவகப்படுத்திச் சொல்கிறார்கள்.

இந்த மந்திரம் நம் மனத்தில் எத்தகையதொரு கற்பனையை உருவாக்குகிறதோ அதில்தான் எல்லாம் துவங்குகிறது. இந்த மனக் கற்பனை இல்லாவிட்டால் ஏதும் நிகழ்வதில்லை. அதாவது கற்பனை என்பது புலனுக்கப்பால் உள்ள ஒரு சகதி நிலை. அங்கே நம் வீட்டைப் பற்றிய மனக் கற்பனையை எழுப்பினால், சிந்திக்குந்தோறும், ஜெபிக்கும் தோறும் கொஞ்சங் கொஞ்சமாக இந்தப் புலனாகாத சக்தி நம் கற்பனை மீது படிந்து படிந்து புலனுக்கு உட்படும் பொருளாக வெளி உலகில் நிகழ்விக்கிறது. இப்படித்தான் அனுமானிக்க வேண்டி இருக்கிறது.

மனக்கற்பனைக்கு அடுத்தது ஜபம்.

நாம் 108 முறையோ 1008 முறையோ தினம் உருவேற்றுவதன் மூலம் அதில் வலிமை ஏறுகிறது.

ஆண்டவனைப்பற்றி எண்ணும்போது, ஒரு குறிப் பிட்ட வளர்ச்சி பெறும்போது நாம் அதில் ஐக்கியமாகி விடுகிறோம்.

சமாதி நிலை அடைகிறோம். அந்தச் சமாதி நிலை யிலிருந்து பிரபஞ்ச ஐக்கியத்திலிருந்து வெளிவரும் போது இந்த ஊர் உலகம், உற்றார் பெற்றோர், செடி கொடி, கல் காற்று எல்லாமே நமக்குத் தொடர்புடைய நண்பர்களாக — வேண்டியவர்களாக நம்மின் பகுதி யாகத் தெரிகின்றன.

"நீயே அது" என்று இதைத்தான் உபநிடதம் கூறுகிறது.

மந்திரங்கள் ஆழங்காண முடியாத ஓர் அறிவுச் சுரங்கம். மனவியாக்கியானத்தை மட்டும் நம்பியிராமல் அநுபவத்தில் இறங்கிப் பயன் காண வேண்டிய விஷயம்.

நாம் விரும்பும் மகானை, ஞானியை, யோகியை நாம் சந்தித்து ஞான தீட்சம் பெறும் வரை அந்த எண்ணத்தை நம் ஆழ்மனத்தில் போட்டு வைப்போம். அதுவரை நாம் அறிந்த மந்திரங்களை ஜபிப்போம்.

இந்தப் பிரபஞ்ச இயக்கத்துடன் ஒன்றாவோம். நம் உற்றார், உறவினர், நண்பர்கள், மனிதர், மாடு, செடி கொடி, கல், நட்சத்திரம் என்று நமது அன்பு எங்கும் பொங்கி வழியட்டும். அந்த அன்பில் தழைக்கும் வையம்.

இந்த உணர்வும் அநுபவமும் ஒரு நாளில் அடைந்துவிடக் கூடியவை அல்ல. ஆனால் நாம் தொடங்குவோம். எண்ணம் நல்லதாக இருக்கும்போது, ஈடுபாடும் தீவிரமும் நம்முள் இருக்கும்போது நம்மால் அடைய முடியாதது எவையும் இல்லை.

ஓம் நமச்சிவாய.

நமோ நாராயண.

ஆமென்.

புத்தம் சரணம் கச்சாமி.

# ஒரு புகழ்பெற்ற பிரார்த்தனை

தேவா!

என்னை உன் அமைதியின் கருவியாக்கு.

எங்கே வெறுப்பு தோன்றுகிறதோ அங்கே அன்பை விதைப்பேன்.

எங்கே மனப்புண் ஏற்பட்டிருக்கிறதோ அங்கே மன்னிப்பை விதைப்பேன்.

சந்தேகம் உள்ள போது நம்பிக்கையை

சஞ்சலம் தோன்றுமிடத்து நல்ல காலம் வருவதை

இருள் சூழுமிடத்து ஒளியை

துயரத்தில் மகிழ்வின் விதைகளை

ஓ! என் தெய்வத் தலைவனே!

ஆறுதல்படுத்தப் படுவதைவிட ஆறுதல் அளிக்கும் பணிக்கு என்னை ஆளாக்கு.

பிறர் என்னைப் புரிந்துகொள்ள வேண்டும் என்ற எண்ணத்திற்கு மாறாக, பிறரைப் புரிந்து கொள்ள வழி காட்டு.

அன்பு செலுத்த வேண்டும் பிறர் என்று அவாவுவதைவிடப் பிறருக்கு அன்பு செலுத்தும் பணியில் ஆளாக்கு.

ஏனெனில்,

கொடுப்பதில்தான் பெறுகிறேன். மன்னிக்கும் போதுதான் மன்னிக்கப்படுகிறேன். சாவதில்தான் அமரத்தன்மை பெறுகிறேன்.

அசிசி என்ற ஊரில் பிறந்த செயிண்ட் பிரான்சிஸ் அவர்களின் பிரார்த்தனை.

# ஆதித்ய இதயம்

**வா**ல்மீகி ராமாயணத்தில், அகத்திய முனிவர் இந்த மந்திரத்தை ராமனுக்கு உபதேசித்தார் என்று எழுதுகிறார் வால்மீகி.

ராம ராவண யுத்தத்தைப் பார்ப்பதற்காக வந்தவர் அகத்திய முனிவர். ராமனுக்கு வெற்றியின் ரகசியத்தை உபதேசிக்கிறார்.

இது மனச் சோர்வை நீக்கி வெற்றியைக் கூட்டு விக்கும் மந்திரமாகக் கருதப்படுகிறது.

உள்ளத்தில் உறுதி, மனத்தில் புதிய சக்தி, தெளிவு,வலிமை, தீய சக்திகளை எதிர்த்துப் போராடும் திறன் எல்லாம் கிடைக்கும் என்று அகத்தியர் கூறுகிறார்.

வலிமையைப்பற்றி எண்ணினால் வலிமை கூடும் என்ற மனவியல் தத்துவத்தின்படி ஆதித்ய இதயம் ஒரு அற்புதமான மந்திரம் என்றே சொல்லவேண்டும். படியுங்கள். பயன் பெறுங்கள்.

ராமா! ரகசியமும் சாசுவதமுமான இம்மந்திரத்தைக் கேள்! இம்மந்திரத்தை ஜெபி, நீ போரில் வெல்வாய்.

இந்த ஆதித்ய இதயம் புனிதமானது.

எல்லா எதிரிகளையும் அழிப்பது.

வெற்றியைத் தருவது; அழிவற்றது.

நன்மையைப் பயக்க வல்லது. மங்களம் தருவது.

பாபங்களைப் போக்குவது.

கவலையையும் துயரங்களையும் பழிப்பது.

ஆயுளை வளர்ப்பது.

இதை நீ தினமும் பாராயணம் செய். தினமும் மூன்று முறை ஜெபி.

* * *

உலகிற்கெல்லாம் ஆண்டவனான சூரியனைப் பூஜை
செய்.
ஒளிக்கதிரைப் பரப்பும் சூரியனை தேவரும் அசுரரும்
வணங்குகிறார்கள்.
அவன் தன் ஒளியால் பிறஒளியை எல்லாம்
மறைக்கிறான்.
தேஜஸ்படைத்தவன். ஒளிக்கதிரின் உறைவிடமானவன்.
எல்லா தேவதைகளாயும் அவன் உருஎடுக்கிறான்.
எல்லோரையும் தன்ஒளிக்கதிர்களால் காப்பாற்றுகிறான்.

இவனே பிரம்மா, விஷ்ணு, சிவன், யமன், சந்திரன்,
மழை
இவனே கடவுள், தேவதை, தந்தை, காற்று, அக்கினி,
ஒளி எல்லாவற்றிற்கும் ஆரம்பம்.
ஆதியில் தோன்றிய சோதி உருக்கிய தங்கமாய்
ஒளிர்பவன்;
அனைத்தையும் அரவணைத்து வளர்ப்பவன்.

ஏழு வண்ண குதிரைகளிலே பவனி வருபவன்.
இருளை அழித்து ஒளியை ஊட்டுபவன்.
உயிரற்ற உலகிற்கு உயிரைக் கொடுப்பவன்.
உருவங்களை ஆக்குபவன்.
உலகைப் படைக்கும் தாய்.

குளிரும் இவனே. வெயிலும் இவனே
நெருப்பும் இவனே. பனியும் இவனே
வானின் தலைவன்; மேகங்களின் மழையும் இவனே
விந்தியமலைமீது பாய்ந்து செல்பவன்; வேதத்தில்
வியாபித்திருப்பவன்

வெப்பமாயும் செந்நிறமாயும் இருப்பவன்.
எல்லாவற்றையும் பார்ப்பவன்; தானே எல்லாமாயும்
இருப்பவன்.
பேரொளி கொண்டவன் அன்பு கொண்டவன்.
பிறப்பனவற்றிற்கெல்லாம் பிறப்பிடம் இவனே.

நட்சத்திரங்களுக்கும் கிரகங்களுக்கும் தலைவன்.
உலகம் உருவாகக் காரணமானவன்.
ஒளிகளுக்கெல்லாம் ஒளி.
பன்னிரண்டு ஆதிகளின் சோதியே உன்னை
வணங்குகிறேன்.

நீ உதயமாகும் கிழக்குமலைக்குத் தண்டனிடுகிறேன்.
நீ மறையும் மேற்குமலைக்குத் தண்டனிடுகிறேன்.
சோதிமண்டலத்தின் தலைவன் நீ
பகலின் தலைவா, உன்னை நெஞ்சிறுத்தி
வணங்குகிறேன்.

வெற்றி தருபவன் நீ; நன்மை தருபவன் நீ; உன்னை
வணங்குகிறேன்.
ஏழுவண்ணக் குதிரைகளில் ஏறிவரும் உன்னைத்
தொழுகிறேன்.
ஆயிரம் கதிர்கள் கொண்ட சூரியனே.
ஆதிசோதியே, உன்னை வணங்குகிறேன்.

எல்லாவற்றையும் தூண்டி உயிர்ப்பிக்கிறாய்.
விரைந்து செல்கிறாய். தாமரையை மலரச்செய்கிறாய்.
உயிரற்ற உலகிற்கு உயிர் கொடுக்கிறாய்.
ஆதிசக்தியே சோதியே உன்னை வணங்குகிறேன்.

பிரம்மா, விஷ்ணு, சிவன்—மூவருக்கும் அதிபன் நீ
பன்னிரண்டு சோதியாய் ஒளிர்பவன் நீ
எல்லாவற்றையும் துலக்குபவன் நீ
அனைத்தையும் உட்கொண்டு வலிமை படைத்தவனாக
விளங்குபவன் நீ

இருளையும் பனியையும் போக்குபவன் நீ
பகைவரை அழிப்பவன் நீ. நன்றி கெட்டவரை
ஒழிப்பவன் நீ
எதிலும் மிதத்தன்மை கொண்டவன் நீ
ஒளியின் தலைவா உன்னை வனங்குகிறேன்.

உருக்கிய தங்கத்தின் ஒளிநீ! அனலின் உரு நீ!
உலகைப் படைக்கும் தேவசிற்பி நீ!
உலகில் நடக்கும் விஷயங்களுக்கெல்லாம் நீ
சாட்சியாய் நிற்கிறாய்.
தேவா! உன்னை வணங்குகிறேன்.

சூரிய தேவா! நீ இவ்வுலகின் அதிபதி.
இதை அழித்துஅழித்து மீண்டும் மீண்டும் ஆக்குகிறாய்!
நீரை உறிஞ்சி, காயவைத்து மீண்டும் மழை
பெய்விக்கிறாய்.
உறங்குபவருக்குள் விழித்துக் கொண்டிருக்கிறாய்!

எல்லா உயிர்களிலும் நிலை கொண்டிருக்கிறாய்!
வேள்வியும் நீயே! வேள்வியின் பயனும் நீயே!
வேதமும் நீயே! வேதங்களின் பலனும் நீயே!
செய்யப்படும் எல்லாக்காரியங்களிலும் நீதான் இயக்கம்.

ராமா! இந்த சூரியனை யார் வழிபடுகிறானோ
அவன் ஆபத்துக்களுக்கும், பயங்களுக்கும்,
கஷ்டங்களுக்கும ஆளாவதில்லை.
இவன் தேவர்களுக் கெல்லாம் தேவன். ஒருமைப்பட்ட
மனதுடன் சூரியனைப பூஜை செய்!
தினம் மூன்று தரம் ஜபி! வெற்றி அடைவாயாக!

'இந்த நொடிப்பொழுதில் நீ ராவணனை வெல்வாய்' என்றார் அகத்திய முனி. ராமன் ஆற்றல் ஓங்க துயர் நீங்கியவனானான்.

இது காலஞ்சென்ற பேராசிரியர் வே. ராகவனின் மொழிபெயர்ப்பை அடிப்படையாகக் கொண்டது.

# டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி

மனவியலைப்பற்றித் தொடர்ந்து, கடந்த பதினைந்து ஆண்டுகளாக தமிழ்ப் பத்திரிகைகளில் கட்டுரைகள் எழுதிவந்தவர் — எழுதிவருபவர்—டாக்டர். எம். எஸ். உதயமூர்த்தி. மனோ தத்துவங்களை வாழ்க்கைக்கு எப்படிப் பயன்படுத்துவது என்பதைச் சுமார் 12 நூல்களில் வடித்துத் தந்திருக்கிறார் அவர்.

''என்னை நானே முன்னேற்றிக்கொள்ள நான் செய்த முயற்சிகள்தான் எனது 'எண்ணங்கள்' என்ற நூல். முன்னேறிய விஞ்ஞானிகள், தொழிலதிபர்கள், பிரமுகர் கள், தலைவர்கள் என்று பலரது வாழ்க்கைச் சரித்திரத் தைப் படித்து நான் தெரிந்து கொண்டதை—வாழ்வில் எனக்கேற்பட்ட அனுபவங்களை—நம் நாட்டுச் சரித்திரம், இன்றைய சமுதாயம் என்ற பரந்த பின்னணியை வைத்துக் கட்டுரைகளை எழுதினேன். அவை என் வாழ்விற்குப் பெரிதும் துணை புரிந்தன. என் எண்ணங்களை வாசகர் களுடன் விகடனில் பகிர்ந்து கொண்டேன்'' என்று தன் நூல்களைப்பற்றிக் கூறுகிறார் எம். எஸ். உதயமூர்த்தி.

சுயவளர்ச்சி பெற வாசகர்கள், எண்ணங்கள்', 'மனம் பிரார்த்தனை, மந்திரம்', 'நெஞ்சமே அஞ்சாதே நீ!', 'தட்டுங்கள் திறக்கப்படும்!' என்ற அவரது நூல்களைப் படிக்கவேண்டும்.

சுய பொருளாதார மேம்பாடு பெற அவரது 'சிந்தனை தொழில் செல்வம்' என்ற நூலை உங்கள் தலையணை மந்திரமாக உபயோகிக்க வேண்டும்.

சமுதாய ஈடுபாட்டின் அவசியத்தை உணர அவரது 'நாடு எங்கே செல்கிறது' என்ற நூலையும் ''நம்மால் முடியும் தம்பி நம்பு!'' என்ற நூலையும் நாட்டு நலனில் அக்கறை கொண்ட அனைவரும் படிக்கவேண்டும்.

ஏனெனில் அவர் உருவாக்கி இருக்கும் மக்கள் சக்தி இயக்கத்தின் முக்கிய லட்சியங்கள் மேலே குறிப்பிட்ட மூன்றும்தான். சுயவளர்ச்சி, சுயபொருளாதார மேம்பாடு, சமுதாய ஈடுபாடு என்ற மூன்றையும் முன்வைத்து, ஒரு

முழு சமுதாயத்தை உருவாக்க முடியும் என்று நம்புகிறார் அவர்.

'ஏன் மக்கள் சக்தி இயக்கம்?' என்ற கேள்விக்கு ''நான் பத்திரிகைகளில் நாட்டைப்பற்றிய பலவிதச் சிந்தனை களையும் யோசனைகளையும் எழுதியபோது, ஏன் நீங்கள் பொதுவாழ்வில் இறங்கிப் பாடுபடக்கூடாது?'' என்ற கேள்வி லேசாகத் துவங்கி,மிகப் பெரிதான குரலில் ஒலிக்கத் துவங்கியது. ஊருக்கு உபதேசம் செய்துவிட்டு ஒதுங்கி நின்றால், 'அவருக்குத் தைரியமில்லை; அல்லது அவர் எழுதுவதிலே அவருக்கே நம்பிக்கையில்லை; அல்லது அவரது சுய சௌகரியம்தான் முக்கியம் அவருக்கு' என்று எனது வாசகர்கள் எண்ணக்கூடும். எழுதியதற்கேற்ப செயல்பட வேண்டும்—நம்மால் முடிந்ததைச் செய்யவேண்டும்—என்ற நோக்கில்தான் மக்களிடையே ஒரு அரசியல், சமுதாய விழிப்புணர்ச்சியை ஏற்படுத்த மக்கள் சக்தி இயக்கத்தைத் துவங்கினோம்'' என்று விளக்குகிறார் உதயமூர்த்தி.

எம். எஸ். உதயமூர்த்தியின் உந்துதல்கள் கன்னியா குமரியிலிருந்து கிருஷ்ணகிரிவரை, வேதாரண்யத்திலிருந்து வால்பாறை வரை இளைஞர்களை, பெண்களை—படித்த மக்களை—ஒரு உத்வேகம் பெறச் செய்திருக்கிறது. சமீபத் தில் டைரக்டர் பாலசந்தர் 'உன்னால் முடியும் தம்பி' என்ற தலைப்பில் ஒரு திரைப்படத்தை வெளியிட்டிருக் கிறார். அப்படத்தின் கதாநாயகன் பெயர் உதயமூர்த்தி. இப்படி பாலசந்தரிலிருந்து பள்ளி இளைஞர்கள் வரை— அவரது எழுத்துக்கள் ஒரு பாதிப்பை—ஒரு உத்வேக உணர்வை—ஒரு நம்பிக்கையை—உருவாக்கி இருக்கிறது; ஒரு அமைதியான மாற்றம் நாட்டில் ஏற்பட்டுக்கொண் டிருக்கிறது.

எம். எஸ். உதயமூர்த்தி விளநகர் என்ற கிராமத்தில், மயிலாடுதுறை தாலுக்காவில், தஞ்சை மாவட்டத்தில் பிறந்தவர். மயிலாடுதுறை உயர்நிலைப் பள்ளியில் படித்தபின் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இளநிலை பட்டப்படிப்பும் முதுநிலை பட்டப்படிப்பும் பெற்றார். சென்னை பல்கலைக் கழகத்தில் தனது பாட மான வேதியியலில் மற்றோர் முதுநிலைப் பட்டம் பெற்ற பின் மேற்படிப்புக்கு அமெரிக்கா சென்றார்.

அமெரிக்கா செல்லுமுன் குடந்தை அரசினர்க் கல்லூரியிலும், கிண்டி பொறியியல் கல்லூரியிலும் (இன்றைய அண்ணா பல்கலைக்கழகத்திலும்) வேதியியல் (Chemistry) உதவிப் பேராசிரியராகப் பணியாற்றினார்.

அமெரிக்காவில் விஸ்கான்சின் பல்கலைக்கழகத்தில் மருத்துவ ரசாயனத்தில் டாக்டர் பட்டம் பெற்று ஒரு பத்தாண்டுகள் விஸ்கான்சிலுள்ள மவுண்ட் செனாரியோ கல்லூரியிலும், மின்னசோட்டா, ஐடகோ பல்கலைக் கழகங்களிலும் பேராசிரியராகப் பணியாற்றினார்.

பின், ஆசிரியத்துறையைவிட்டு விலகி விஸ்கான்சினில் உணவு தயாரிக்கும் நிறுவனம் ஒன்றில் அதன் தலைமை நிர்வாகியாக நான்காண்டுகள் பணியாற்றினார். 1982-ல் (Barclay Chemicals) பார்க்கிளே கெமிகல்ஸ் என்ற தனது சொந்த ரசாயனப் பொருள்களை உற்பத்தி செய்யும் நிறுவனத்தைத் துவங்கினார். அந் நிறுவனத்தைத் தனது குமாரரிடம் ஒப்படைத்துவிட்டு 1987-ல் நிரந்தரமாக இந்தியா வந்தார். இன்று சென்னையில் வசிக்கிறார் அவர்.

சிறந்த ஆசிரியர் என்ற விருதும், 'புல்பிரைட்' அறிஞர் (Ful Bright Scholar) என்ற கௌரவமும், அமெரிக்காவில் தொழில் துறையில் உள்ளவர்களில் 'யார் யார்' என்ற நூலில் அவரது பெயர் இடம் பெற்ற பெருமையும் அவருக்குண்டு.

தன் கட்டுரைகளின் மூலம், பேச்சின் மூலம், செயல்களின் மூலம் ஆக்கப்பணிகளைச் செய்து வருகிறார்; மக்களைத் தட்டி எழுப்பி வருகிறார்.

தனது அறிவுக்கும் திறமைக்கும் ஏற்ற ஒரு புதிய சமுதாயத்தைத் தமிழகம் பெறவேண்டும் என்று விரும்புகிறார் எம். எஸ். உதயமூர்த்தி.

எம். எஸ். உதயமூர்த்தி ஒரு எழுத்தாளர்.

எழுத்து என்னவெல்லாம் செய்யும்?

பொறுத்திருந்து பார்ப்போம்!

---

